




தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பரிதாவி ஐப்பசி (17-10-72) [கருணை 1


## சிவபெருமான்

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய
ஊனினை யுருக்கி, புள்ளொளி பெருக்கி
யுலப்பிலா ஆனந்தமாய

தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தே
னெங் கெழுந் தருளுவதினியே.


| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-87.
Pin Code No. 600087

● கோயில்களில் துளசிச் செடி, வாசனையுள்ள நறுமலர்ச் செடி, இவைகளை வளர்த்தல், தோட்டம் அமைத்தல் முதலியன அளவற்ற நன்மைகளைத் தரும்.

● யஜுர்வேதத்தில் உள்ள மந்திரங்கள் வசன நடையில் உள்ளவை. இதில் 40 அத்தியாயங்களும், 1975 மந்திரங்களும் உள்ளன.

● பெரியோர்களைக் கொண்டு குறிப்பிட்ட மந்திரங்களின் மூலம் குறிப்பிட்ட உருவத்தில், குறிப்பிட்ட கடவுளை நிலைத்து எழுந்தருளச் செய்வதற்கு பிரதிஷ்டை என்று பெயர்.

● நாம் சாதாரணமாகக் கருதும் வாழைப் பழத்தில் வைடமின் ஏ. பி. ஸி. டி. ஈ. ஆகிய ஐந்தும் உள்ளன.

● திருப்பதி ஸ்ரீ ஏழுமலையானுக்கு ஆகஸ்ட் மாதத்தில் உண்டியல் மூலம் சுமார் 22 லெட்சம் ரூபாய் வருமானம் வந்துள்ளது. லட்டு விற்பனை சுமார் 5 லெட்ச ரூபாய் வருமானம் வந்துள்ளது. கோயிலின் இதர அநேக வருமானங்கள் இன்னமும் கணக்கு எடுக்க முடிய வில்லையாம்.

● திருச்செந்தூர் ஸ்ரீ சுப்ரமணியசுவாமி ஆலயத்தைக் கடல் அரிப்பிலிருந்து பாதுகாப்பதற்காக ரூபா 3 லெட்சம் செலவில் தடுப்புச் சுவர் ஒன்று எழுப்பப்படுகிறது என்று ஆலய நிர்வாக அதிகாரி செய்தி தெரிவித்தார்.

● வீட்டில் வசதியில்லாத போது ஓட்டலுக்குப் போனாலும் பிளேட்டில், கரண்டியில், உண்பது கூடாது. இலையில் கொண்டு வரச் செய்து உண்ணுதல் வேண்டும்.

● உள்ளத்தில் உண்மையான உயர்ந்த எண்ணங்களையே நினைத்த வண்ணமாக இருப்பது உடல் ஆரோக்யத்துக்கு நல்லது.

● தேங்காய்ப் பால், நாட்டுச் சர்க்கரை சேர்த்துச் சாதம் கலந்து சாப்பிட்டால் வாய்ப்புண் ஆறும்.

● சூரிய உதய நேரத்தில் தினசரி சிறிது நேரம் சூரிய ஒளியை உற்று நோக்கினால் கண்ணுக்கு மிகவும் நல்லது.

● இந்து சமயங்கள் அனுட்டானத்தால் வளர்ந்தனவே அன்றிப் பிரசாரத்தால் வளர்ந்தன அல்ல.

● வேளூர் என்பது, வைத்தீஸ்வரன் கோவிலாகும். அது சோழவள நாட்டில் காணிக்கை செலுத்தும் பெருந்தலமாகவும், முருகன் அருட் பெருமை விளங்கும் அருந்தலமாகவும் விளங்கி வருகிறது,

● தேவாரம், திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் அருளால் நமக்குக் கிடைத்தது. சித்தாந்த சாஸ்திரங்கள் திருவெண்ணெய்

நல்லூர் பொல்லாப் பிள்ளையார் அருளால் கிடைத்தன.

● தருமையாதீனம் சென்னையில் சமயப்பிரசார நிலையம் அமைத்து அடிக்கடி விழாக்களைக் கொண்டாடுவதும், தத்துவங்களை விளக்குவதும், சென்னை நகர மக்கள் பெற்ற பெரும் பேறு ஆகும்.

● கூட்டு வழிபாட்டினால் ஒருமைப்பாடு உண்டாகிறது. மக்களிடையே தெய்வபக்தி பரவவும், கட்டுப்பாடு வளரவும், ஒற்றுமை உணர்ச்சி ஓங்கவும் கூட்டு வழிபாடு மிகவும் அவசியம்.

● திரௌபதி, கிருஷ்ணபரமாத்மாவை நம்பியபோது, துகில் உரிய, உரிய வளர்ந்து கொண்டே வந்தது. எனவே எல்லாவற்றிற்கும் அடிப்படை மக்களுக்கு நம்பிக்கை வேண்டும்.

● இயற்கையில் துளையோடு உண்டாவது ருத்திராக்ஷம் ஒன்று தான். இந்த ருத்திராக்ஷம் நேபாளத்தில் விளைகிறது.

● பரமசிவனுக்கு உரிய ஐந்து அடையாளங்களில் பஸ்மமாகிய விபூதி ஒன்று. அவனுக்குப் பிரீதியான மற்றோர் அடையாளம் ருத்திராட்சம். மற்றொன்று பில்வம்.

● பசுமாடு மற்ற எல்லாப் பிராணிகளைவிடப் பரிசுத்தமான மிருகம். எல்லாத் தெய்வங்களும் பசுமாட்டின் சரீரத்தில் இருக்கின்றன என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

● காலையில் எலுமிச்சம்பழச் சாற்றை சர்க்கரை இல்லாமல் வெந்நீரில் கலந்து சாப்பிட்டு வர உடம்பு அழகாகவும் வனப்பாயும் இருக்கும். பித்தம் தீரும்.

● புதிய கோவில்களை நிர்மாணிப்பதைவிடப் பழுதடைந்து கிடக்கும் ஆலயங்களுக்குத் திருப்பணி செய்து சிறந்து விளங்கச் செய்வதே பெரும் புண்ணியம்.

● காஞ்சி ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் 1894 ஆம் ஆண்டு மே மாதம் 20ந் தேதி விழுப்புரம் நகரில் ஸ்ரீ சுப்ரமணிய சாஸ்திரிகள், மகாலெட்சுமி அம்மாள் என்ற தம்பதிகளுக்கு அவர்கள் செய்த தவப் பயனாகத் தோன்றினர்.

● ஆசிரியர்களுக்குள் எல்லாம் தலைசிறந்த ஆசிரியர் காலம். அது புகட்டிய பாடங்களுக்கு நிகராக இது வரை எவருமே புகட்டியதில்லை.

● மாணவர்கள் பள்ளியில் படிக்கும் போது ஒழுக்கத்தை கற்றுக் கொள்ளாவிடில் அவர்களுடைய படிப்பிற்காக பணத்தைச் செலவிட்டது நாட்டிற்கே பெரிய இழப்பு.

● கவலை என்பது பயம் என்னும் மையப்புள்ளியைச் சுற்றி சுழன்று வரும் பயனற்ற எண்ணங்களால் உருவான வட்டமே.

● இரத்தம் உடம்பில் செல்வதற்குக் குழாய்கள் தேவையாயிருப்பது போல் ஆன்மாவுக்கு

நல்ல நோக்கங்கள் தேவை யாகும்.

● பணம், ஆற்றல், திறமை ஆகியவை எல்லாம் வாழ்க்கைக்குரிய பொருள்களே அன்றி, அவையே வாழ்க்கை அல்ல.

● நமக்குக் கிடைக்கும் வருமானம் நம் கால் செருப்பு போன்றது. அளவுக்குக் குறைந்தாலோ நம்மைக் கடிக்கும். அளவுக்கு அதிகமாக இருந்தாலோ சரியாக நடக்க விடாமல் காலை வாரும்.

● முறைப்படி ஸ்நானம் செய்யாமலோ, முறைப்படி வஸ்திரம் அணியாமலோ, நெற்றிக்கு அணியாமலோ கோவிலுக்குச் செல்வது குற்றமாகும்.

● மனிதப் பிறவியில் ஒவ்வொரு ஆன்மாவிற்கும் பக்தி முக்கியமானது. பகவானுடைய அருளைப் பெறுவதற்கு இதுவே லலிதமான மார்க்கம். பக்தியில்லாதவன் பதருக்கு ஒப்பாவான்.

● உலகில் யாரும் முற்றிலும் கொடியவர்களாகப் பிறக்க முடியாது. அவர்களிடம் ஏதாவது ஒரு நல்ல குணம் இருந்து தான் தீரும். அது தான் ஸ்ருஷ்டியின் நியதி.

● மூன்று ராமர்கள் உண்டு. ஒருவர் தசரத ராமனுக்கு முன் பிறந்த பரசுராமர். மற்றொருவர் கிருஷ்ணனுடைய தமையனாகப் பிறந்த பலராமர். நடு நாயகமாக இருப்பவன் தசரத ராமன்.

● அமெரிக்காவில் உள்ள நியூயார்க்கில் பிள்ளையார் கோவில் ஒன்று கட்டுவதற்காக அங்கு இந்தியர்கள் அதிகமாக வாழும் பரோ ஆப் குயின்ஸ் என்னும் இடத்தில் 50 ஆயிரம் டாலர் (ரூ. 3·65 லெட்சம்) செலவில் நிலம் வாங்கப்பட்டுள்ளது. இதன் பரப்பளவு 929 சதுர மீட்டர்.

● வட அமெரிக்க ஹிந்து ஆலயக் கழகம் இந்தக் கோயிலைக் கட்டுவதற்காக ஏற்பாடு செய்துள்ளது. இந்த ஆலயத்தின் தலைவராக ஐ. நா. பொதுக் காரியதரிசியின் பிரதம ஆலோசகரான சி. வி. நரசிம்மன் பொறுப்பு வகிக்கிறார்.

● நாற்பது வயதைக் கடந்தவர்கள் இனிப்பு உணவாக தேன் சாப்பிடலாம். அதனால் அவர்களுக்குச் செரிப்புத் தொல்லைகள் ஏதும் இருக்காது.

● ஆண்—பெண் என்ற வேறுபாடின்றி எந்த வயதினர்க்கும் வலிவு தரும் உணவு தேன். எலுமிச்சம் பழச் சாற்றுடன் தேன் கலந்து அருந்தினால் உள்ளே இருக்கும் உறுப்புக்களுக்கு வலிவூட்டும்.

● அன்னையாய், அத்தனாய் நின்று நாம் எந்த வழியில் வழிபடுகிறோமோ, அந்த வழியில் நமக்காக. நம் நிலைக்கு இறங்கி வந்து, நம்முடன் கலந்து நின்று திருமால் அடியார்களைக் காப்பான்.

● வைதிக நெறியில் பல மதங்கள் நடைமுறையில் இருப்பினும்,

ஸ்ரீ சங்கராச்சார்யரால் பரப்பப் பட்ட அத்வைதமும், ஸ்ரீ ராமா நுசரால் பரப்பப்பட்ட விசிஷ் டாத்துவைதமும். ஆனந்த தீர்த் தர் என்ற ஸ்ரீ மத்துவாசாரிய ரால் பரப்பப்பட்ட துவைதமும் முக்கியமானவை.

● வடபழநி ஆண்டவன் சந்நிதி யில் ஆலய நிர்வாகிகள் ஒரு போர்டு எழுதி மாட்டியிருக்கிறார் கள். அதில் "ஸ்ரீ வடபழநி ஆண்ட வன் திருவருளின் சிறப்பல்லால் பிறவார்த்தை யாதொன்றும் பேசற்க ஆலயத்துள்'' என்று எழுதியிருக்கிறார்கள்,

● பசுவின் சாணத்திற்கு கிருமி களை அகற்றவும், துர்நாற்றத் தைப் போக்கவும் சக்தி உண்டு. சாணத்தால் தயாரிக்கப்பட்ட விபூதிக்கும் அந்த சக்தி உண்டு, விபூதி உடம்பிலுள்ள நீர்க் குற் றத்தை அகற்றுகிறது.

● நாமம் அணிவதன் கருத்து இறைவனது திருவடியை அடை தலே மனிதர்களது முக்கிய கடமை ஆகும் என்பதை இது உணர்த்துகிறது. நாமம் திருவடி போன்று அமைக்கப்பட்டிருக் கிறது.

● காலையில் சூரிய உதயத்திற்கு முன் எழுந்திருந்து கை, கால், முகம் கழுவி, திருநீறணிந்து கட வுளையும் தாய் தந்தையையும் வணங்க வேண்டும்.

● வீட்டில் எத்தனை மின்சார விளக்குகள் இருந்தாலும் குத்து விளக்கு ஒன்றை மாலையில் எண்ணெய்திரியிட்டு விளக்கேற்றி பூமாலை சார்த்தி, பொரி—பழம் முதலியன வைத்து நிவேதித்து, சிறிது நேரம் வீட்டில் உள்ள எல் லோரும் ஒன்று சேர்ந்து இருந்து தோத்திரங்கள் பாட வேண்டும்.

● சிவபெருமான் தோத்திரம் தேவாரம், திருவாசகம், திரு விசைப்பா திருப்பல்லாண்டு, புராணம் என ஐந்து வகைப் படும்.

● மனிதன் ஆறறிவு உடைய வன். அவனுக்குப் பகுத்தறிவு உண்டு. அவன் புண்ணிய பாவங் கள் இவையிவை என அறிபவன். புண்ணியங்களைச் செய்து மேலு லகை அடைந்து கடைசியில் இறைவன் திருவடியை அடைதற் குரியவன். ஆதலால் மனிதப் பிறப்புச் சிறந்தது.

● திருமகள் என்ற பெரிய பிராட்டியார், மண்மகள் என்ற பூமாதேவி, ஆயர் மகள் என்ற நீளா தேவி ஆகியவர்கள் திருமா லின் தேவிமார்கள் ஆவார்கள்.

● பால் பெற விரும்புவோன் பசுவின் மடியை வருடிப் பால் பெறுவது போல், இறைவன் அரு ளைப் பெறவிரும்புவோன் ஆலயத் தில் சென்று இறைவன் திருமுன் நின்று வழிபட்டு திருவருளைப் பெறுதல் வேண்டும்.

● மலையே இல்லாத சோழவள நாட்டில் உள்ள தஞ்சையில் ராஜ ராஜ சோழன் வானளாவிய கோபுரத்தையும், திருமதில்களை

யும் மண்டபங்களையும் என்றென்றும் அழியாத நிலையில் சிலையில் செதுக்கினான்.

● குரு ஆவதற்கு எல்லோரும் விரும்புகின்றனர். ஆனால் சீடனாக இருப்பதற்கோ எவனும்விரும்புவதில்லை.

● சாதுவையோ தெய்வத்தையோ தரிசிக்க ஒருகாலும் வெறுங்கையுடன் போகவே கூடாது. காணிக்கை எவ்வளவு அற்பமானதாக இருந்தாலும் பரவாயில்லை.

● நமக்கு தீங்கு விளைவிக்கிற நாய், நரி, பாம்பு, தேள், புலி இவைகளை நாம் கொன்று தின்பதில்லை. ஆனால் பரமசாதுக்களாக உள்ள ஆடு, மாடு, கோழி இவைகளைக் கொன்று தின்கிறோம்.

● சுகமும் துக்கமும் சேர்ந்துதான் இருக்கும். தனியே இன்பமும், தனியே துன்பமும் இருக்க மாட்டாது. நீருள்ள இடத்தில் சேறும் இருக்கும். கடலில் குளிக்கப் போனால் அலையும் இருக்கும். அரிசியுடன் உமியும் சேர்ந்திருக்கும். ரோஜா மலர் எடுக்கப் போனால் முள்ளும் இருக்கும்.

● நதி, குளம் முதலிய தீர்த்தங்களில் உடையுடுத்து முழுக வேண்டும். நீராடியபின் உடையை நீருள் பிழியக் கூடாது.

● இரவில் கிழக்கே தலைவைத்துப் படுத்தல் நல்லது. ஆண்கள் இடது பக்கம் கீழிருக்கவும், பெண்கள் வலது பக்கம் கீழிருக்கவும் படுத்து உறங்க வேண்டும். நல்ல தெய்வ சிந்தனையுடன் உறங்க வேண்டும்.

● நம்மிடம் உள்ள கல்வி, செல்வம், குலம் இவையெல்லாம் இறைவன் தந்தது என்று கருதி, தன்னை உயர்ந்தவன் என்று கருதாமல் அடக்கம் ஒடுக்கமாக வாழ்ந்து பிறவியின் பயனைப் பெற வேண்டும்.

● ஒரு மனிதனின் வெளித் தோற்றத்தை மட்டும் கண்டு நல்லவன் என்றோ, தீயவன் என்றோ உறுதி செய்து விடக் கூடாது. உள்ளத்தின் பண்பைக் கண்டு முடிவு செய்ய வேண்டும்.

● நமது செல்வம் அழியாமல் இருக்க வேண்டுமானால் ஏழைகள் கண்களிலிருந்து நீர் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பிறருடைய பொருள் நமக்கு வர வேண்டுமென்று எண்ணக் கூடாது. நியாயம் அல்லாத வழியில் பொருளைச் சேர்க்க கூடாது.

● நம்முடைய பழைய தரும நூல்களில் பெண்களுக்குச் சந்யாசம் விதிக்கவில்லை. மனைவி சற்று ஏறுமாறாக இருந்தால் கூறாமல் சந்யாசம் கொள் என்று ஆணுக்கு விதித்திருக்கிறது. பெண்ணுக்கு அல்ல.

● தருமம் என்றும் அழியாதது. மற்றதெல்லாம் அழிந்து விடும். தேன் தான் கெடாது, தன்னில் விழுந்த பொருள்களையும் கெடா

மல் பாதுகாக்கும். அது போல தருமம் ஒன்றுதான் எப்போதும் அழியாமல் நின்று தருமம் புரி வோரையும் காத்தருள்கிறது.

● ஆழ்வார் திருநகர் சிந்தா மணி விநாயகர்கோவில் மஹா மண்டபத்திற்கு, விநாயகர் சதுர்த்தி அன்று தமிழ் நாடு கவர் னர் திரு. கே. கே. ஷா அவர்கள் அடிக்கல் நாட்டினார்கள்.

● கடவுளை நம்புகிறவன் முட் டாள் என்று பிரசாரம் செய்யப் படுகிற இந்தக் காலத்தில் கோவி லுக்கு வருகிற மக்கள் கூட்டம் அதிகமாகிறது. வடபழநி ஆண்ட வர் கோவிலில் மாதக் கிருத்திகை களின் போது மக்கள் கூட்டம் மிக அதிக அளவில் வந்து சுவாமி தெரி சனம் செய்து கொள்ளும் காட்சி கண்கொள்ளாக் காட்சி.

● காய்ச்சிய பாலில் நெல்லிச் சாற்றைக் கலந்து தேன் அல்லது வெல்லம் சேர்த்து அருந்தலாம். நெல்லிச்சாறு பாலின் மந்த குணத்தை நீக்கிவிடுவதோடு, அதை எளிதில் செரிக்குமாறும் செய்கிறது.

● காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ சங்க ராச்சார்ய ஸ்வாமிகள் சம்பிர தாயமாக வேத வேதாந்த விற் பன்னர்களை மட்டும் அல்லாமல் சிற்பம், புராணப் பிரவசனம், காலக்ஷேபம், வில்லுப்பாட்டு, கர கம் ஆடுதல், முதலிய பிராசீன மாகிய கலைகளையும் ஆதரித்து வரு கிறார்கள்.

● தினசரி தியானம், பிரார்த் தனை, ஜபம் முதலிய ஆன்மீக நெறிகளை நாம் வழுவாது கடைப் பிடித்து வந்தால் நம்மிடம் மன அமைதி தானாகவே ஏற்படும்.

● பால் சீக்கிரத்தில் புளிப் படைந்து கெட்டுவிடுகிறது. இதற் குக் காரணம் இதில் உற்பத்தியா கும் பாக்டீரியா என்னும் சிறிய ஜீவ அணுக்கள்.

● காஞ்சி காமகோடி பீடாதி பதி ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் 1945 ஆம் ஆண்டிலேயே ஆஸ்பத் திரிகளில் இருக்கும் நோயாளி களுக்கு பிரஸாதம் வழங்க ஸ்தா பனம் நிறுவினார்கள். பல்வேறு பாகங்களில் இப்பணி, இன்னும் தொடர்ந்து நடைபெற்று வரு கிறது.

● நம்முடைய ஆசை காரண மாகவே நாம் கெட்ட கார்யத் தைச் செய்கிறோம்; பிறகு வருந்து கிறோம். பாபம் செய்யச் செய்ய அது சகஜமாய் விடுகிறது. பாபத்திற்குக் காரணமான ஆசையை நீக்கி பக்தியைக் கடைப் பிடிக்க வேண்டும்.

● வேதாந்தம் படித்தாலும் ஆசை போகவில்லை. கெட்ட எண் ணம் போகவில்லை. வேதாந்தம் படிப்பதால் அடையக் கூடிய பல னைப் பெறப் பக்குவமேற்படும்படி வைதிக கர்மாக்களைச் செய்ய வேண்டும்.

● இந்து கலாசாரம், பாரம்பரி யம், இந்து தேவாலயச் சிறப்புக் கள் ஆகியவற்றை மையமாகக்

கொண்டதும் சென்ற சில ஆண்டு காலமாக காஞ்சி காமகோடி ஆசார்யாள் கலந்து கொண்டு புனிதமாக்கிய சில நிகழ்ச்சிகளைக் கொண்டதுமான 16 எம். எம். டாக்குமெண்டரி தொகுப்பு வண்ணப்படம் ஒன்றை உருவாக்கிய திரு. ஜே. சடகோபனின் புனிதப் பணி போற்றத்தக்கது.

● இந்த டாக்குமெண்டரி தொகுப்பில் கோலாகலமான கோவில் திருவிழாக்கள் பிரதானமாக இடம் பெற்றிருந்தன. காஞ்சியின் கோவில் கலைச் சிறப்புக்கள் அங்கு 1964ல் நடந்த ஆகம சில்ப சதஸின் மறக்க முடியாத அற்புதக் காட்சிகள் 1968ல் நிகழ்ந்த குடந்தை மகாமகக் காட்சிகள் ஆகியவை சிறப்பிடம் பெற்றிருந்தன.

● வால்மீகி முனிவரால் வடமொழியில் இயற்றப் பெற்ற இராமாயணம் 24000 ஈரடிப்பாக்களைக் கொண்டது.

● மகாபாரதம் வியாஸமுனிவரால், தொகுக்கப்பட்டது. இது ஓர் இலட்சம் ஈரடிச் செய்யுள்களால் நிறைந்த 18 பர்வங்களைக் கொண்டது.

● ஸ்ரீ கிருஷ்ணர், அர்ஜுனனுக்கு அருளிய உபதேச மொழிகளைக் கொண்டு ஒப்புயர்வற்று விளங்கும் நூல் பகவத்கீதை.

● நாம் பண்ணுகிற தப்பு நமக்குத் தெரியும் எவ்வளவு என்று. கெட்ட குணம் உள்ளவன் என்று நம்மைப் பலபேர் வைது கொண்டே இருப்பார்கள். அப்போது யார் வைகிறார்களோ அவர்களிடம் நமக்குக் கோபம் வரும். ஆனால் உள்ளுக்குள் நாம் எவ்வளவு அக்ரமம் பண்ணுகிறோம் என்பது ஒருவருக்காவது தெரியாது.

● ஒவ்வொருவரும் தம்மாலான வகையில் பிறருக்கு உதவ வேண்டும். ஏழைகளாக இருப்பவர்கள் சரீர உபகாரம் செய்யலாம். பணக்காரர்கள் பொருளுதவி செய்யலாம். செல்வாக்கு உள்ளவர்கள் மற்றவர்களின் நிலை மேம்படத் தமது செல்வாக்கை உபயோகிக்கலாம்.

● ஆலயங்களில் உள்ள மூர்த்திகளுக்கு நிவேதனமும், காணிக்கை செலுத்துவதும் எல்லாவற்றையும் படைத்த பரம்பொருளுக்கு நன்றி செலுத்துவதற்கு அறிகுறியாகச் செய்யப்படுபவைகளே.

● திருத்தணி ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி ஆலயத்தில் வருண ஜபத்தை அறநிலைய கமிஷனர் ஸ்ரீ வி. நரசிம்ம முதலியார் அண்மையில் துவக்கிவைத்தார். வருண ஜபம் துவங்கிய சில மணி நேரத்துக்குப் பின்னர் கனத்த மழை பெய்தது.

● வள்ளிமலை சரவணபொய்கை திருப்பணிக்கு குறைந்தது ஒரு லெட்ச ரூபாய் செலவாகும் என்றும் இது வரை சுமார் முப்பதினாயிரம் ரூபாய் வசூலாயிருக்கிறது என்றும் மீதி ரூபாயும் விரைவில் கிடைக்க பொது மக்களும் கொடைவள்ளல்களும் உதவி செய்ய வேண்டும் என்றும் திரு

முருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் தெரிவிக்கிறார்கள்.

● சுமார் 20 வருஷங்களாய் நின்று போயிருந்த ஊத்துக்காடு ஏகாதசி திவ்யநாமபஜனை மீண்டும் 17—11—72 முதல் ஏகாதசி தோறும் அவ்வூரில் கோவில் கொண்டுள்ள ஸ்ரீ ருக்மணி ஸத்ய பாமா சமேத ஸ்ரீ காளிங்கநர்த்தன கிருஷ்ணன் சன்னதியில் மீண்டும் துவக்கி நடத்த ஏற்பாடாகியுள்ளது.

● அவனவன் எந்தெந்த தர்மத்தில் இருக்கிறானோ, அந்தந்த தர்மத்தைக் காமம், கோபம் ஒன்றும் இல்லாமல் செய்ய வேண்டும் என்பதே கீதை உபதேசம். இப்படிச் செய்தால் உயர்ந்த பலம், உயர்ந்த கொள்கைகள் அவனிடத்திலும் உண்டாகிவிடுகின்றன.

● மகாவிஷ்ணு ஒரு கையில் பாஞ்சசன்யம் என்ற சங்கினையும், மற்றொரு கையில் சுதர்சனம் என்ற சக்கரத்தினையும் ஒரு கையில் நாந்தகம் என்ற கதையினையும் இவர் கொண்டிருக்கிறார். ஒரு கை அபய ஹஸ்தமாக அமைந்திருக்கிறது.

● முருகப்பெருமான் யானையை வரவழைத்தகாரணம்இறைவனே குருவாய்த் தோன்றி உபதேசமும் செய்வான் என்பதை உணர்த்துவதற்கே. யானை, இறைவனது ஓங்காரப் பிரணவ சொரூபமாகும்.

● பழநிப் பெருமானது மலை ஊர் நிலப்பரப்புக்கு மேல் 450 அடி உயரமுடையது. ஏறிச் செல்லும் படிகள் 697 ஆகும்.

● பழனிக்குன்றினைச் சுற்றி அழகியதொரு கிரிப்பிரகாரம் உண்டு. அது ஏறக்குறைய ஒன்றேகால் மைல் சுற்றளவு உடையதாகும்.

● திருவாவினன்குடிக்கோயிலே இப்புராதன தல ஆதிக் கோயிலாகும். இதனையே நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் முருகனின் மூன்றும் படை வீடாகப் போற்றியுள்ளார்.

● கோயிலுக்குப் போகும் போது உலக விவகாரங்களிலே மனத்தைச் செலுத்தாமல், நாம் வழிபடச் செல்லும் பெருமானின் திருநாமங்களை உச்சரித்துக் கொண்டு பயபக்தியோடு செல்ல வேண்டும். ஆனால் நம்மில் பெரும்பாலோர் உலக விவகாரங்கள் பேசுவதற்கே கோயிலுக்குப் போய்க் கொண்டிருக்கிறோம்.

● சிவபெருமான் ஒருவரே நம்மோடு என்றும் தொடர்பு உடையவர். நமக்கு நம்மினும் இனியவராக உள்ளவர். அவருக்கே நாம் எல்லாம் உடைமைப் பொருள். அவருக்கே நாம் எல்லாம் மீளா அடிமை.

● சென்னை அமைந்தகரை ஹோட்டல் அருண் பின்புறம் உள்ள ஸ்ரீ கைலாஸ விநாயகர் ஆலய மகாகும்பாபிஷேகம் விநாயகர் சதுர்த்தி அன்று வெகு விமரிசையாக நடைபெற்றது. இந்தக் கும்பாபிஷேகம் செய்தவர்கள் ஸ்ரீ அ. மு. பழநியப்ப செட்டியார் குடும்பத்தார் ஆவார்கள்.

●

# அருள் வாக்கு



ஸ்ரீ காமகோடி பீடம்
ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி
ஸ்வாமிகள்

சூரியன் உதித்தால் எப்படித் தாமரை மலர்கிறதோ அதே போல் கடவுள் நினைப்பு இருந் தால் நம் மனம் என்னும் தாமரை யும் ஆனந்தத்துடன் மலர்ந்து இருக்கும்.

தாமரைப் பூவை எப்படி வண்டு வந்து அண்டுகிறதோ அதேபோல் நமது மனத்தை விஷ யங்கள் வந்து அண்டுகின்றன.

தாமரையானது தண்ணீரில் இருந்தால்தான் செழிப்புற்று இருக்கும். அதேபோல் நம் மனம் கருணை (அன்பு) என்னும் குணத் தில் இருந்தால்தான் மனது சாந் தமாக இருக்கும்.

தாமரைத் தண்டின் நூலினால் எப்படிப் பெரிய பிராணியை கட்டமுடியாதோ அதேபோல் நம் மனத்தின் நினைப்பினால் மாத் திரம் எல்லாக் காரியத்தையும் செய்யமுடியாது.

தாம்ரைப்பூ எப்படி நல்ல வாசனையுடன் திகழ்கிறதோ அதேபோல் நம் மனமும் நல்ல எண்ணத்துடன் திகழவேண்டும்.

தாமரைப்பூ எப்படி சிகப்பாக வும், வெண்மையாகவும் இருக்கி றதோ அதேபோல் நம் மனத்தில் ரஜோ குணமும் சத்வகுணமும் இருக்கிறது. (செந்தாமரை ரஜோ குணம். வெண்தாமரை சத்வகுணம்)

தாமரைத் தண்டு எவ்விதம் கருப்பாக இருக்கிறதோ அதே போல் நம் மனம் தமோ குணம் உடையதாய் இருக்கிறது.

தாமரைக் குளத்தில் ஜல மானது எப்படி எப்பொழுதும்

ஜில் என்று இருக்கிறதோ அதே போல் நம் மனதானது கடவுள் நினைப்போடு இருந்தால் எப் பொழுதும் சாந்தமாயும் குளுமை யாகவும் இருக்கும்.

சந்தன மரத்தைப் பாம்புகள் சுற்றிக் கொண்டே இருக்கும். ஆனால் சந்தன மரத்திற்கோ, சந் தனக் கட்டைக்கோ அதனால் எவ்விதக் கெடுதலும் ஏற்படாது. அதேபோல் மகான்கள் இடத்தில் எவ்வளவு துஷ்டர்கள் இருந்தா லும் அவர்களுடைய மனத் திற்கோ, உடலுக்கோ ஒருவித மான மாறுதலும் ஏற்படுவது இல்லை.

நம் மனத்தைச் சிந்தனை அற்ற தாகச் செய்ய முயலுகிறோம். ஆனால் முடியவில்லை. மஹான் களோ வெளியில் சிந்தனையற்று இருக்கும் சித்தத்தை சிந்திக்க வேண்டுமேயென்று சிந்தனைக்கு உட்பட்டு மிகவும் சிரமமாக சித் தத்தை உலக சிந்தனைக்குக் கொண்டு வருகிறார்கள்.

தாமரைப்பூ சூரியனைக் கண் டால் மலருகிறது. இரவில் மூடிக் கொள்கிறது. மறுபடியும் காலை யில் சூரியனைக் கண்டால் மலரு கிறது. மறுபடியும் இரவில் மூடிக் கொள்கிறது. ஆனால் ரோஜாப்பூ ஒரு தடவை மலர்ந்துவிட்டால் மறுபடியும் மூடிக்கொள்ளவே கொள்ளாது. எப்போதும் மலர்ந்த நிலையிலேயே இருக்கும். அதேபோல் சாமான்ய மனிதர் களின் மனது ஆசைப்பட்ட பொருள் கிடைத்ததும் சந்தோ ஷத்தால் மலர்கிறது. விரும்பிய பொருள் கிடைக்காவிட்டால் மனது சுருங்குகிறது. ஆனால் மஹான்களுடைய மனது எப் போதும் மலர்ந்த நிலையிலேயே இருக்கிறது.

உன் வாழ்க்கையில் எப்போது கஷ்டங்களும் துக்கங்களும் அதிக மாக ஏற்படுகின்றதோ அப் பொழுதுதான் உன் மனத்தை மிகவும் தைரியமாக வைத்துக் கொள்ளவேண்டும்.

நீ கஷ்டப்படுகிறாய் என்றால் நீ செய்த பாவபலத்தை அனுபவிக் கிறாய் என்று உன் மனத்தைச் சமாதானம் செய்துகொள்.

எனக்கு வீடும், பூமியும் இருக் கிறது. ஆட்கள் மனைவி, புதல்வர் கள் இருக்கிறார்கள் என்று சந் தோஷப் படாதே. இவைகள் எல்லாம் உன்னைவிட்டு ஒரு காலத் தில் நீங்கிவிடும். அல்லது நீ ஒரு நாள் இவைகளைவிட்டுப் போக நேரிடும். உன்னுடன் எப்பொழு தும் உன்னைவிட்டுப் பிரியாமல் இருப்பது நீ செய்த நல்வினை, தீவினைகளே. இப்போது நீ சந் தோஷமாய் இருக்கிறாய் என்றால் நீ செய்த நல்வினைப் பயன்தான் காரணம். அதை அறிந்து கொண்டு இனியும் எப்பொழுதும் சந்தோஷமாய் இருக்க கடவுள் வழிபாட்டையும் தர்ம கார்யங் களையும் நிறையச் செய். அதுவே நீ மேலும் மேன்மையடைய வழி யாகும்.

சாமான்யமான மண்ணை எடுத்து ஜலத்தில் கரைத்தால் ஜலம் பூராவும் கலங்கிவிடும். ஆனுல் மணலைத் தண்ணீரில் கரைத்தால் தண்ணீரில் கலக்கம் ஏற்படாது. அதேபோல் உலகத்தில் மூர்கர்கள் இருப்பது உலகத்திற்கு கலக்கத்தைச் செய்யும். ஆனுல் ஆண்டவனின் அருள் பெற்றவர்கள், ஆத்மஞானிகள் உலகில் இருப்பது உலகிற்கு எத்தகைய கெடுதலும் ஏற்படாது.

மண் தண்ணீரில் கலந்து விடுகிறது. நல்ல மணல் தண்ணீரில் கரைவதில்லை. அதேபோல் சாமான்ய மனிதர்கள் உலகில் தானும் கலந்து விடுகிறனர். ஆத்மஞானி உலகோடு கலக்காமல் ஆனுல் உலகிலேயே இருக்கிறுர்கள்.

தராசில், ஒரு பக்கம் அளந்து காட்டும் படிக்கல்லும், மற்றெரு பக்கத்தில் அது அளந்து காட்டும் பொருளையும் காண்கிறேம். இரும்புப் படிக்கல்லும், உயர்ந்த பொருளும் சமமான அளவில் இருந்தாலும், உயர்ந்த பொருளுக்குப் போடும் மன மதிப்பை சாமான்ய கல்லுக்குப் போடமாட்டார்கள். உடல் அளவில் சாமானியர்களும் ஞானியும் ஒரே மாதிரியாய் இருந்தாலும் தன்மையில் மேலோங்கி இருக்கிறுர்கள். அதேபோல் படித்தவனும் படிக்காதவனும் ஒரே காரியத்தில் சமமாக ஈடுபட்டாலும் படித்தவனுக்குக் கொடுக்கும் மதிப்பைப் படிக்காதவனுக்குக் கொடுக்க முடியாது.

கடிகாரத்தின் முள் நகருவது தெரியாமல் எவ்விதம் நகர்ந்து கொண்டு போய்க்கொண்டே இருக்கிறதோ அதேபோல் நம்முடைய ஆயுளும் நகருவது தெரியாமல் நகர்ந்து கொண்டே போகிறது. அதேபோல் நம்முடைய மனத்தில் இன்னதைத்தான் நினைக்கிறேம் என்று தெரியாமல் எதையாவது நினைத்துக் கொண்டேதான் இருக்கிறேம்.

கடிகாரத்தில் சாவி இல்லாவிட்டால் முள் நகர்வதில்லை. அதேபோல் விழிப்பும், சொப்பனமும் இல்லாவிட்டால் நம்மனம் ஒன்றையும் சிந்திப்பதில்லை.

கடிகாரத்திற்கு ஒரு நாளைக்கு ஒருமுறை சாவிகொடுத்தால் போதும். நமக்கு இரண்டு மூன்று தடவை தினமும் ஆகாரம் கொடுக்க வேண்டும்.

கடிகாரத்துக்கு சாவி அதிகம் கொடுத்துவிட்டாலும் கடிகாரம் சீக்கிரம் கெட்டுவிடும். குறைவாகக் கொடுத்தாலும் அடிக்கடி நின்றுவிடும். அதேபோல் நமக்கும் உணவை அதிகமாகச் சாப்பிட்டாலும் குறைவாகச் சாப்பிட்டாலும் கெடுதல் உண்டாகும். கடிகாரத்துக்கு அளவாகச் சாவி கொடுப்பது போல் உடலுக்கும் குறையாமலும், அதிகமாகாமலும் உணவை அளிக்கவேண்டும்.

அறிவுள்ள ஒருவனுல் சாவி கொடுக்கப்பட்டு ஜடமான கடிகாரம் ஓடுகிறது. அதேபோல் பேரறிவு சொரூபணமாய் உள்ள பரம்பொருளின் சக்தியினுல் இந்த ஜடமான சரீரம் உலகில் நடமாடுகிறது.

மின்விசிறி சுற்ற வேண்டுமானுல் ஸ்விட்சைப் போடுகிருேம். அது சுற்றுகிறது. அதேபோல் நாம் நல்வினை தீவினைக் காரியங்களைச் செய்ததன் பலனுக சம்ஸார ஸாகரத்தில் சுற்றுகிருேம்.

மின்விசிறியின் காற்று சிலருக்கு ஒத்துக் கொள்ளும். சிலருக்கு ஒத்துக் கொள்ளாது. அதேபோல் உண்மையான சுகத்தை விரும்புகிறவனுக்கு இந்த சம்சார சாகரத்தில் ஏற்படும் சுகதுக்கங்கள் பிடிக்காது. சாமானிய மனிதர்கள் இந்த சம்சாரத்தில் ஏற்படக்கூடிய சுகத்தையே பெரிதாக நினைத்துவிடுவார்கள்.

மின் விசிறியின் காற்று செயற்கை. உண்மையான காற்று அல்ல. அதேபோல் சம்சாரத்தில் ஏற்படக் கூடிய சுகதுக்கங்களும் பொருள்கள் மூலம் ஏற்படக் கூடிய ஒரு செயற்கை சுகமே. உண்மையான நம்முடைய இயற்கை சுகமல்ல.

இயற்கை காற்றின் சுகத்தை அனுபவிக்க வேண்டுமானுல் மரங்கள் செடிகள் இல்லாத பரந்த பிரதேசத்திற்குச் செல்ல வேண்டும். அதேபோல் எங்கும் நிறைந்து பரந்து நிற்கும் ஆண்டவனின் அருள் எங்கு கிடைக்குமோ அங்கு சென்று உண்மையான நம்முடைய இயற்கையான சுகத்தைப் பெற முயற்சிக்க வேண்டும்.

நதியில் எவ்வளவு வேகத்துடன் ஜலம் செல்லுகிறதோ அவ்வளவு வேகம் நதியிலிருந்து பாயும் வாய்காலில் போகாது. அதேபோல் மனத்தில் எவ்வளவு வேகத்துடன் எண்ணங்கள் எழுகின்றனவோ அவ்வளவு வேகம் இந்திரியங்கள் மூலம் செயல்படுகையில் இருக்காது.

சமுத்திரம் என்ருலே பெரிய பெரிய அலைகள் மீன்கள், முதலைகள், நல் முத்துக்கள் எல்லாம் தான் இருக்கும். அதேபோல் வாழ்க்கை என்ருலே சுகம், துக்கம், பெரியது, சிறியது எல்லாம் இருக்கத்தான் செய்யும்.

குயில்கள் கத்த ஆரம்பித்தாலும், மயில்கள் தோகை விரித்துக் கொண்டு ஆட ஆரம்பித்தாலும், மழைவரும் என்பார்கள். அதேபோல் மகான்கள் வசிக்கும் இடத்தில் சுபீட்சம் விளங்கும்.



# பசு ஸம்ரக்ஷணம்



ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

தொன்றுதொட்டுப் பசுவும் அதனுடன் இணைந்துள்ள புனித எண்ணங்களும் தத்துவங்களுமே நம் கலாசாரத்திலுள்ள மற்ற சிரிய அம்சங்களையும் உருவாக்கித் திகழச் செய்துள்ளன.

பாலூட்டித் தன் சிசுக்களை வளர்க்கும் இனங்களிலே பசு ஒன்றுதான் குழந்தைகளுக்குப் பால் கொடுத்துச் சம்ரக்ஷிப்ப துடன் மற்ற இனத்தைச் சார்ந்த பாலகர்களையும் விருத்தர்களையும் பால் கொடுத்துப் போஷிக்கிறது. ஆகவே நாம் பசுவினிடம் நம் தாயினிடம் காட்டும் பக்தியையும் மரியாதையையும் காட்டவேண்டும்.

கோடிக்கணக்கான இந்தியர்கள் கடவுளை அடைவதற்கு, கல்லினால் கட்டிய கோவிலிலுள்ள கர்ப்பக் கிருகங்களைக் காட்டிலும் நடமாடும் கோவிலான பசுவையே மிகவும் சிறந்த சாதனமாகக் கருதுகிறார்கள்.

தமிழ் நாட்டுச் சமயாசார்யர்களும் மனித சமூகத்தில் லௌகிக க்ஷேமத்துக்குப் பசுவின் ஸம்ரக்ஷணம் அவசியம் என்பதைப் போதித்திருக்கிறார்கள்.

நம் நாட்டுச் சமய குரவர்களில் ஒருவரான ஞானசம்பந்தப் பெருமான் ஹிந்துமத முக்கியக் கொள்கைகளில் பசு ஸம்ரக்ஷணையைச் சேர்த்துள்ளார்.

சங்க நூல்களில் பிரபலமான புறநானூறு, 'யுத்த காலத்தில் யுத்தத்தில் ஈடுபடும் இரு கட்சியார்களும் பசுவைக் காப்பாற்றுவதை முதல் கடமையாகக் கருத வேண்டும்' என்று வலியுறுத்துகிறது.

பசுவே உலக க்ஷேமத்தை அளிக்க வல்லது என்பது நம் நாட்டு மகான்களின் தெளிந்த முடிவு.

கண்ணனின் அவதாரம் கோஸம்ரக்ஷணைக்காகவே என்பதை அவரது 'கோபாலன்' என்ற திருநாமம் எடுத்துக் காட்டுகிறது.

வங்கம்-பிகார் எல்லையிலுள்ள ஸந்தால் பர்கணு ஜில்லாவில், இலுப்பை மரம், பூர்விக மக்களுக்கு முக்கிய உணவை அளித்து வந்தது. ஆதலால் இலுப்பை மரம் அழியாமல் இருக்க அதற்குச் சட்டபூர்வமான காப்பு அளிக்கப் பட்டுள்ளது. வருமானத்தைப் பெருக்குகிறது என்பதற்காக, ஆகாரத்துக்கு உபயோகமில்லாத சந்தன மரம் சட்டமூலமாகக் காப்பாற்றப்படுகிறது.

இம்மாதிரி சாமானிய இனங்களுக்குக் காப்பு இருக்கையில், தேசியச் செல்வமான பசுவைக் காப்பாற்றவும், பசு வதையைத் தடுக்கவும் சட்டம் எவ்வள்வு அவசியம் என்பதை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

பசுவதையைத் தடுப்பதுடன், அதை ரக்ஷிக்க ஒவ்வொரு கிராமத்திலும் கட்டாயமாக மேய்ச்சல் தரை ஒதுக்கச் சட்டம் செய்ய வேண்டும். மேலும், மாடுகளுக்குத் தீவனமான பிண்ணாக்கை எருவாக உபயோகிப்பதைத் தடுக்க வேண்டும்.

ஆங்கில ஆட்சிக்கு முன்பு, கிராமங்களில் மேய்ச்சல் தரைகள் ஏராளமாக இருந்தன. பசுவின் க்ஷேமத்தைக் கருதாமல் அம்மாதிரி நிலங்களைப் பிரிட்டிஷ் அரசாங்கம் தர்காஸ்தாகக் கொடுத்துவிட்டதனால், கிராமங்களில் மேய்ச்சல் தரை குறைந்து விட்டது.

முகலாய அரசர்களான அக்பரும் ஷாஜஹானும், நம் காலத்திலேயே ஆப்கனிஸ்தான் அமீரும், பசு ஸம்ரக்ஷணையின் அவசியத்தை உணர்ந்து அதற்கான சட்டங்களையும் செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

பொது ஜனங்களும், சட்ட சபை அங்கத்தினர்களும் பசுவை ஸம்ரக்ஷிக்கத் தங்களாலான உருப்படியான முயற்சிகளைச் செய்ய வேண்டும். அரசியலாரையும் இந்தப் பிரச்னையின் முக்கியத்தை உணரும்படியாகச் செய்து, நமது தேசியச் செல்வமான பசுவுக்கு ரக்ஷணை அளிக்க வேண்டும்.

வயல்களில் கஷ்டமான வேலைகளைச் செய்யும்படியான நிர்ப்பந்தத்துக்குப் பசுக்களை உட்படுத்துவது மதக் கோட்பாடுகளுக்கு முரணனது மட்டுமன்று; பசுக்களுக்குப் பெருத்த அநீதியுமாகும். அப்படிச் செய்வதனல் நாட்டில் வருமானம் குறையும்; நாளடைவில் பசுக் குலமே நசித்துப் போகும்.



# இல்லறம்



பகவான்
ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்

சொந்தமானவர் அல்லர் என்பதை உன் உள்ளத்தினுள் அறிந்துணர்வாயாக.

தனவந்தர் ஒருவருடைய வீட்டிலே உள்ள வேலைக்காரி அவ் வீட்டு வேலைகளையெல்லாம் செய்யத்தான் செய்கிருள். ஆனுல் அவளுடைய சிந்தனையெல்லாம் அவளுடைய சொந்த கிராமத்திலே உள்ள சொந்த வீட்டின் மீது முனைந்து நிற்கின்றது. யஜமானருடைய குழந்தைகளைத் தன் குழந்தைகள் போன்றே அவள் போஷித்து வளர்க்கின்ருள். அவர்களைப் பற்றி என் ராமன், என் ஹரி என்று கூட அவள் குறித்துப் பேசுகின்ருள். ஆனுல் அக் குழந்தைகள் அவளுக்குச் சொந்தமே அல்லர் என்பதை அவளுடைய உள்ளம் வெகு நன்ருக அறியும்.

உன் கடமைகளை யெல்லாம் விடாது செய்துவா, ஆனுல் உன் உள்ளத்தை இறைவன் பால் இருத்து. யாவருடனும் சேர்ந்து வாழ்ந்து வா. மனைவி மக்கள், தந்தை தாய் அனைவருடனும் கூட இருந்து அவர்களுக்குப் பணி புரி. உனக்கு அவர்கள் மிகப் பிரியமானவர்கள் போன்று அவர்களை நடத்தி வா. ஆனுல் அவர்கள் உனக்குச்

ஆமையானது நீரில் அங்குமிங்கும் போய்க் கொண்டிருக்கின்றது. ஆனுல் அதனுடைய எண்ணங்கள் எங்குள்ளன என்பது உனக்குத் தெரியுமா? அதே நதிக் கரையில் அதனுடைய முட்டைகள் கிடக்கும் இடத்தின் மீது உள்ளன அதன் எண்ணங்கள். உலகத்தில் உனக்குள்ள கடமைகள் யாவையும் புரி. ஆனுல் உன் மனதை இறைவன்பால் இருத்து.

# ஞான விருந்து



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

அஹிம்சை பயிலுதல் போன்ற தவமும், வாய்மை பேசுதல் போன்ற விரதமும், பொறிகளையும் மனதையும் கட்டுப்படுத்துதல் போன்ற கட்டுப்பாடும் இல்லை.

அஹிம்சை ஊக்கத்தை அளிக்கும் ஒரு மகத்தான இலட்சியம். அஹிம்சை பயில மானஸீகத் துறவு முதல் தேவையும் முக்கிய நிபந்தனையுமாகும்.

பெயர் — புகழ் — பண ஆசைகளைத் துறந்தவனே தான் அஹிம்சை பயில வல்லவன்.

அஹிம்சையே மேலாம் அன்பு. அஹிம்சையைப் பயின்ருல் அன்பு வளரும்.

ஒரு யானையின் அடிச்சுவட்டில் இதர ஜீவன்களின் அடிச்சுவடுகள் உள் அடங்கி நிற்பன போன்று அஹிம்சை என்ற மகத்தான விர

தத்தில் மதங்களும் நன்னெறி விதிகளும் திரண்டு ஒன்றி நிற்கின்றன.

அஹிம்சையே ஒப்பற்ற ஆத்மீக சக்தி, மேலாம் நற்குணம். வீரமும் மனோதைரியமும் மிக்க உள்ளவனிடத்தே இது அமையும். அவனே இதை அனுஷ்டிக்கவும் வல்லவன். மனோ தைரியம் இல்லாத கோழை மனத்தானுக்கும் ஒழுக்க நெறி தவறியவனுக்கும் இது ஏற்பட்டதல்ல. அவர்களால் இதை அனுஷ்டிக்கவும் முடியாது.

பிறன் உன்னை ஹிம்சிக்குங்கால் அவன் மாட்டுப் பழிக்குப் பழி வாங்கும் எண்ணத்தையோ வேறு நேர்மையற்ற உணர்ச்சிகளையோ கொள்ளாதே.

இன்னு செய்தாரை வெகுளாது அவர்கள் நாண நன்னயம் செய்து விடு. துவேஷம் இருக்குமிடத்தில் அன்பைச் செலுத்து.

அஹிம்சை பயிலுபவனுக்கு பணிவு இன்றியமையாதது.

சத்யம் போல் உயர்வான மதமும், சீரிய நற்குணமும், சிறந்த தர்மமும், விலை மதிப்புள்ள பொக்கிஷமும் இல்லை.

சத்தியமே கடமை, தவம், யோகம்.

சத்தியம் இருக்குமிடத்தில் அஹிம்சையும், அஹிம்சை இருக்குமிடத்தில் சத்தியமும் இருக்கும். அஹிம்சையும் சத்தியமும் ஒரே தத்துவத்தின் இரு தோற்றங்களே.

சத்தியம்தான் நிலைத்துநிற்கும், அசத்தியம் அல்ல. சத்தியத்தின் மூலமேதான் சத்திய சொரூபனாகிய உனது ஆத்மனையும் அறிந்தாக வேண்டும்.

உயிருக்கே ஆபத்தான நிலைமையிலும் கூட சத்தியத்தைக் கடைபிடிப்பவன் மற்றவர்களுக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறான். இவனுடைய இச்செய்கை மற்றவர்களுக்கு அவர்களுடைய வாழ்க்கையில் நேரிடும் கஷ்டங்களை எதிர்த்துப் போராட போதிய ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளிக்கின்றது.

மனோ உறுதி, கருணை, பெருந்தன்மை, பொறுமை, ஓரம் சாராமை, தன்னடக்கம், துறவு, தியானம், அஹிம்சை, நியாயம் ஆகிய இவைகள் யாவும் சத்தியத்தின் வெவ்வேறு வடிவங்களாம்.

ஒன்றையும் மிகைப்படுத்தாதே. உண்மையையும் மறைக்காதே. மாற்றாதே.

சத்தியம் மௌனமாகவே பேசும். அதுவே சூக்ஷ்மமான தெய்வீகக் குரல். அதுவே களங்கமற்ற — தூய்மையுமான — மனச்சாட்சியாகும்.

பொய்யும் வஞ்சகமும் சத்தியத்திற்கு மாறானவைகள். கொடிய பாபங்களை விளைவிப்பவைகள். எனவே அவற்றை அறவே புறக்கணி.



# இந்து மதத்தில் ஆதாரமில்லை



மகாத்மா காந்திஜி

மானிட வர்க்கம் முழுவதும் மாத்திரமல்ல, எல்லா ஜீவராசிகளுமே சகோதர பாவத்துடன் வாழ வேண்டுமென இந்து மதம் வற்புறுத்துகிறது. அது நம்மைக் கிறுகிறுக்கச் செய்யும் மகோன்னதமான ஒரு தத்துவமாகும்... ஒரு பிராமணர், ஓர் எறும்பு, ஓர் யானை, நாயைத் தின்னும் ஒருவர் எல்லோரும் சமம் என்பதே களங்கமற்ற, பரிசுத்தமான இந்து மதத்தின் தன்மையாகும். நம்முடைய வேதாந்த தத்துவம் மிகவும் சிரேஷ்டமானதாலும், அதற்கிணங்க வாழ்வதற்கு நாம் தவறிவிட்டதாலும், அதே தத்துவம் இன்று நமக்கு மிகவும் கசப்பாக இருக்கிறது.

எந்தத் தீண்டாமையில் இன்று நாம் நம்பிக்கை வைத்துச் செயலில் காட்டி வருகிறோமோ, அதற்கு இந்து சாஸ்திரங்கள் என்று நாம் கூறும் நூல்களில் எல்லாம் ஓர் ஆதாரத்தைக்கூட என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை.

இந்து மதம் உண்மையில் தீண்டாமையை ஆதரிக்கிறது என்பதை நான் அறிவேனாயின், பின்னர் இந்து மதத்தையே விட்டு விட நான் தயங்கமாட்டேன்.

என்றாலும் சில சந்தர்ப்பங்களில் ஓரளவுக்கு இந்து மதம் தீண்டாமையை அனுமதித்திருக்கிறது.

உதாரணமாக, என் தாயார் அசுத்தமான பொருட்களைக் கையாளும் ஒவ்வொரு தடவையும் அவள் தீண்டாதவளாகி விடுகிறாள். எனவே மீண்டும் தன்னைச் சுத்தமாக்கிக் கொள்ள அவள் ஸ்நானம் செய்தாகவேண்டும். ஒருவரைப் பிறப்புக் காரணமாகத் தீண்டாதாராகக் கருதலாம் என்பதை, நான் வைஷ்ணவன் என்ற முறையில் ஒப்புக் கொள்ள மாட்டேன்.

மதத்தினால் அங்கீகரிக்கப்படும் தீண்டாமை தற்காலிகமானது...

அதீ தீண்டாமை செய்கையைக் குறிப்பதேயன்றிச் செய்தவரைக் குறிப்பதல்ல.

நெசவாளி, தோட்டி இவர்களைத் தீண்டாதார் என்று சாஸ்திரங்கள் குறிப்பிடவில்லை. நான் ஒரு நெசவாளி; தோட்டியும்கூட. என் தாயார் நிச்சயமாக ஒரு தோட்டிதான். ஏனெனில் நான் குழந்தையாக இருந்தபோது அவள் என்னைக் கழுவிவிட்டுச் சுத்தம் செய்யவில்லையா? ஆனால் அதற்காக அவள் தோட்டியாகிவிடவில்லை. அப்படியிருக்க, அது போன்ற அவசியமான தொண்டு செய்யும் பங்கி, ஏன் ஒரு தீண்டாதாராகக் கருதப்பட வேண்டும்.

சாஸ்திரிகளின் உலகமே என்னை எதிர்த்து நின்றால் கூடத் தீண்டாமை இந்து மதத்தின் ஓர் அம்சம் என்று அவர்கள் கருதுவது தவறு என்பதை நான் கூரை உச்சியிலிருந்து பிரகடனம் செய்வேன். சைத்தான் எப்போதுமே வேத சாஸ்திரங்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் கூறுவது உண்டு! ஆனால் வேத சாஸ்திரங்கள் நியாயத்திற்கும் உண்மைக்கும் அப்பாற்பட்டவையாக இருக்க முடியாது.

இன்றும் ஆடவரையோ, பெண்மணியையோ பெருந்தன்மை வாய்ந்தவராகவும் வீரராகவும் செய்யும் சகல குணங்களும்தான் வேதங்களின் தத்துவமாகும்.

தங்கள் நிலை குறித்துக் குற்றம் குறை கூறாமல் பெரும் தொண்டு புரியும் தேசத்தின் தோட்டிகளை வெறுத்து, காறி உமிழ்ந்து நாய்களைக் காட்டிலும் இழிவாக நடத்துவதில் பெருந்தன்மையோ, வீரத்தனமோ எதுவுமில்லை.

எனது விளக்கம் சரியாயினும் தவறாயினும் தீண்டாமை, பகுத்தறிவுக்கும், இரக்கம், அன்பு அல்லது அனுதாப உணர்ச்சிக்கும் முரணாக இருக்கிறது. கோ பூஜையை நிலைநிறுத்தியுள்ள ஒரு மதம் மனிதர்களைக் கொடுமையாகவும், மனிதத்தன்மையற்ற முறையிலும் பகிஷ்காரம் செய்வதை அனுமதித்து அதற்கு இடம் கொடுக்காது...

என் உயிரைக் காட்டிலும் அதிகமாக நான் இந்து மதத்தை நேசிப்பதால், அந்தக் களங்கம் எனக்குச் சகிக்க முடியாத ஒரு சுமையாக இருக்கிறது. நமது சமூகத்தில் ஐந்தில் ஒரு பிரிவினருக்குச் சம உரிமை அளிக்க நாம் மறுப்பது கடவுளையே மறுப்பதாகும்.

மனு ஸ்மிருதியில் உன்னதமான உபதேசங்கள் அடங்கியிருப்பதால், அதை ஒரு மத நூலாகவே கருதுகிறேன்...அதன் மூலக்கிரந்தம் இப்போது யாரிடமும் இல்லை...

உண்மையில் மனு என்ற ஒரு ரிஷி இருந்தார் என்பதை நிரூபிக்கக்கூட ஒரு சாட்சியமுமில்லை. மகத்தான உண்மைகளை எழுதியவர்களோ அல்லது உபதேசம் செய்தவர்களோ, எப்படியோ

தாங்கள் இருந்தவிடமே தெரியாமல் செய்து கொண்டிருப்பது இந்து மதத்தின் அற்புதமான ஓர் அம்சமாகும்.

எனவே, உண்மையை நாடுவோருக்கு நான் ஒரு யோசனை கூறியிருக்கிறேன். அதாவது சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்வோருக்கு வழிகாட்டும் பத்திரமான விதி என்னவெனில், சர்வ மதங்களுக்கும் உண்மை அஸ்திவாரங்களான சத்தியத்துக்கும், அகிம்சைக்கும் முரணாக உள்ள எதையும் நிராகரித்துவிட வேண்டுமென்பதுதான்.

'பங்கி'க்கு என்ன தருமம் உண்டோ, அதே தருமத்தைக் கீதை பிராம்மணருக்கு விதிக்கவில்லை. எனினும், மிகவும் கற்றறிஞரான பிராம்மணர் எவ்வளவு அன்புக்கும் மதிப்புக்கும் உரியவரோ, அதே அளவுக்குப் பங்கியும் உரியவர் என்று கீதை வற்புறுத்துகிறது.

ஒரு மனிதனின் தற்போதைய நிலைக்கு அவரது கர்மாவே, அதாவது முன் பிறப்பில் செய்த வினையே காரணமென்று கூறுகிறார்கள். ஆனால், பாவம் செய்த ஒருவர் மீது கற்களை எறியும்படி எனது கர்மா என்னை வற்புறுத்தவில்லை... தாழ்ந்த வகுப்பில் பிறந்த ஒருவரை சீரழிந்து போகும்படி விட்டுவிடுவது, கர்மா என்ற மேன்மையான சித்தாந்தத்தைப் பகிரங்கமாக இழிவு செய்வதாகும். ஒரு செம்படவரால், தாம் கௌரவிக்கப்பட்டதை ஸ்ரீ ராமபிரான் ஒரு பாக்கியமாகவே கருதினார். ●

# மனிதன்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

மனிதன் என்ற சொல்லுக்கு நினைப்பவன் என்பது பொருள். நினைக்கும் கருவி மனம். மனத்தையுடையவன் மனிதன். தமிழில் மனிதன்; வடமொழியில் மநுஜா; ஆங்கிலத்தில் 'மேன் இவையெல்லாம் 'மன்' என்ற பகுதியடியாகவே பிறந்தவை.

மனிதனுகப் பிறந்தவர் எல்லோரும் உண்மையில் மனிதனுகிவிட முடியாது. உணவைப் பற்றியோ, உறக்கத்தைப் பற்றியோ, வேறு மற்ற உலகப் பொருள்களைப் பற்றியோ நினைப்பவன் மனிதனுக மாட்டான். உண்பது, உறங்குவது, மக்களைப் பெறுவது, உலாவுவது முதலிய யாவும் விலங்குகளுக்கும், நமக்கும் பொது. விலங்குகளும் நிரமப உண்கின்றன. நாமும் உண்கின்ருேம். விலங்குகளும் மக்களைப் பெறுகின்றன. நாமும் பெறுகின்ருேம்.

'நான் யார்? என் உள்ளமார்? நான் எங்கிருந்து வந்தேன்? எதற்காகப் பிறந்தேன்? இந்த உடம்பு தானே வநததா? ஒருவன் தந்து வந்ததா? தந்தவன் தன் பொருட்டுத் தந்தானு? என்பொருட்டுத் தந்தானு? நான் எங்கே போக வேண்டும்? இந்த உடம்பைத் தந்த ஒருவன் தன்மை யாது? அவனை அடையும் வழி யாது? அடைந்தவர்கள் யார்?' என்பன வாதி வினுக்களை உள்ளுக்குள் கேட்டுக்கொண்டு அவை பற்றி ஆழமாக நினைத்து, தகுந்த விடைகளை யறிந்து அறவொழுக்கத்தில் நிற்பவன்தான் உண்மைமனிதன். இல்லையேல் மனித உடம்பெடுத்த விலங்குதான்.

ஒரு மாவட்டத்திற்கும் மற்ருெரு மாவட்டத்திற்கும் என்ன வேற்றுமை? நடுவில் ஒரு எல்லைக் கல் இருந்து இரண்டு மாவட்டங்களையும் பிரிக்கின்றது. அதுபோல் மனிதனுக்கும் விலங்குக்கும் இடையில் இட்ட எல்லைக் கல் கடவுள் நினைவு. கடவுள் உணர்வு இல்லையானுல் அவன் எத்துணை அறிஞுயினும் விலங்கே,

திருவொற்றியூரிலே நெல்லிக் காய்ப் பண்டாரத் தெருவில் ஒரு மகான் இருந்தார். மாலையிலேயே ஒற்றித்தியாகப் பெருமானை வணங்கும் பொருட்டு மக்கள் போகும்போது அம் மகான், "குதிரை போகின்றது," "எருமை போகின்றது," "நாய் போகின்றது," "ஆடு போகின்றது," "புலி போகின்றது," "நரி போகின்றது," "பூனை போகின்றது," "பெருச்சாளி போகின்றது" என்று கூறுவாராம். இராமலிங்க அடிகளார் போனால மட்டும் "மனிதன் போகின்றான்" என்பாராம். ஆகவே மனிதப் பண்புடையவனே உண்மையான மனிதன்.

நாம் மனிதர்களாக ஆகவேண்டும். பொன்னையும் பொருளையும் ஆட்டையும் மாட்டையும் நில புலன்களையும் பட்டத்தையும் பதவியையுமே நினைத்து நினைத்து நெஞ்சு புண்ணாகி மடிந்துவிடக் கூடாது.

முதலில், குறிப்பிட்ட நேரங்களில் இறைவனை நினைக்கவேண்டும். பின்னர் நாள் செல்லச் செல்ல நல்ல சாதனையால் இடையறாது இறைவனை நினைக்க வேண்டும்.

"இறைவனே! உன்னை மறந்தால் இறந்து போவேன" எனகிறார் அப்பர். இறைவன் நினைப்பவர்களுடைய உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளுவான்.

ஒரு மந்திரி, அல்லது கலெக்டர் நம்முடைய வீட்டிற்கு வந்து சில நிமிஷம் இருந்து சென்றால் அதனைப் பெருமையாக நினைக்கின்றோம். இறைவன் நமது உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு உறைவானாயின அதைவிடப் பெருமை வேறு ஒன்று இருக்க முடியுமா? நன்கு சிந்தியுங்கள்.

# தாலியும் பூணூலும்

## நஜன்

மாங்கல்யம் என்ற தாலி பெண்களின் தற்காப்புக்காக ஏற்பட்டதாகும். அவள் மணமான மங்கை, ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டவள் என்பதையே தாலி உணர்த்துகிறது.

இன்று போல் தாலி அன்று தங்கத்தினுல் ஆனவை அல்ல.

பண்டைக்கால திருமணத்தில் மணமகன் புலிப்பல் தாலியையே மணமகள் கழுத்தில் கட்டினுன். அப்புலித்தாலியின் உருவம்தான் இன்று வேறுவிதமாக மாறியிருக்கிறது. தாலிக்கே நூல் என்ற பெயரும் உண்டு.

குழந்தைகளுக்கு நோய் வராமலிருக்க ஐம்படைத் தாலி கட்டும் வழக்கம் முன்னுளில் இருந்து வந்தது. காக்கும் தெய்வமான திருமாலின் ஐந்து படைக்கலங்களையும் எழுதி நூலிலே கோர்த்து கழுத்தில் அணிந்தால் பீடை அணுகாது என்பது பண்டையோர் கொள்கை.

எந்த வகுப்பாரையும் பிரித்துக் காட்டுவதற்கோ, பாகுபடுத்திக் காட்டுவதற்கோ, முன்னேர்கள் பூணூல் தரிப்பதை ஏற்படுத்தவில்லை. பிராமணர்கள் மட்டும் பூணூல் தரிக்கும் விஷயத்தை ஏக போகமாக்கிக் கொள்ளவில்லை. க்ஷத்திரியர்களும் வைசியர்களும் தரித்து வருகிருர்கள்.

பெண்கள் அணிந்துள்ள தாலி ஆண்களுக்கு 'கிட்ட நெருங்காதே' என்று எப்படி எச்சரிக்கை காட்டுகிறதோ அதே மாதிரி ஆண்களின் பூணூல் பெண்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை உணர்த்த உதவுகிறது.

நமது மூதாதையர் நாட்களில் விருந்தோம்பல் பெருமைதரும் சிறந்த பண்பாடாக இருந்தது. அக் காலத்தில் வியாபார நிமித்தமும், நாட்டுப் பாதுகாப்பு நிமித்தமும், க்ஷேத்ராடனத்திற்காகவும் பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் ஊர்விட்டு ஊர் செல்ல வேண்டிய அவசியம் இருந்தது.

அக்காலத்தில் ஹோட்டல்கள் கிடையாது. பசியைத் தீர்த்து, படுத்துத் தூங்க இடம் கொடுப்பதை ஒரு பெருமையாகக் கருதி வந்த காலம் அது. முன்பின் தெரியாதவர்கள் கூட உபசரிக்கப்பட்டு வந்தார்கள்.

தலைவன் வீட்டில் இல்லையே என்று தலைவி விருந்தினர்களை உபசரிக்காமல் இருந்ததில்லை. தலைவனில்லாத சமயம் வாசல் திண்ணையில் வந்திருக்கும் விருந்தாளியை வீட்டிற்கு வரும்படி உடனே அழைத்துவிட மாட்டார்கள். கதவு இடுக்கு வழியாக விருந்தினரைப் பார்ப்பாள். விருந்தாளியின் உடலில் பூணூல் இல்லை என்றால் வாலிபத்தின் தலைவாசலை அவன் இன்னும் மிதிக்கவில்லை என்று கண்டுகொள்வாள். அவனைத் தன் தம்பிக்கு சமானமாகக் கருதுவாள்.

விருந்தாளி ஒற்றை வடத்தில் பூணூல் அணிந்திருந்தால், அவன் வாலிப தசையை அடைந்தவன் ஆனால் மணமாகாதவன் என்று கண்டு கொள்வாள். இவனை மிக ஜாக்கிரதையாக உபசரிப்பாள். நேருக்கு நேர் வரமாட்டாள்.

விருந்தாளியின் உடம்பில் இரட்டை வடம் பூணூல் காணப் பட்டால் அவன் மணமானவன் என்று அர்த்தம். தங்கைக்கும் தாரத்திற்கும் வித்தியாசம் காட்டும் பண்புடையவன் என்பதை இரட்டை வடப் பூணூல் காட்டும். அவனை மூத்த சகோதரனாகப் பாவித்து நடந்து கொள்வாள் தலைவி.

அதிதியின் உடம்பில் மூன்று வடம் பூணூல் காணப்பட்டால் அவரை தந்தைக்குச் சமானமான வராகக் கருதி உபசரிப்பாள்.

இவ்வளவு நுண்ணறிவோடு இந்த பூணூல் தரிக்கும் வழக்கத்தை நமது பெரியவர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

தாயின் வயிற்றில் பிறக்கும் பிறப்புடன் ஞானப் பிறவி என்ற பிறவியையும் இப்பிறப்பிலே அடையலாம் என்பது இந்துமதக் கொள்கைகளில் ஒன்று.

பூணூல் தரிக்கும் பிராம்மணர்களும், க்ஷத்திரியர்களும் வைசியர்களும் இதில் நம்பிக்கை யுடையவர்களே. பூணூல் அணிபவர்களை 'த்விஜர்' (இரு பிறப்பாளர்) என்றும் கூறுவதுண்டு.

உபநயனம் என்றால் "கூட ஒரு கண்ணைப் பெறுவது" என்று அர்த்தம். இரண்டு கண்களுடன் அறிவுக்கண் ஒன்றையும் பெற வேண்டும் என்பது உபநயனத்தின் உட்பொருள்.

உபநயனம் என்றால் அருகில் அழைத்துச் செல்கிறது என்றும் ஒரு அர்த்தம் உண்டு. யார் அருகில்? குருவின் அருகில். அதாவது குருகுலவாசம் ஆரம்பம். உபநயனம் பிரும்மசரியத்திற்கு ஆரம்பம். இந்த குருகுலவாசம் 12 ஆண்டுகள்.

ஆவணி அவிட்டத்தன்று வேதம் ஓதுவது விசேஷ பலனையளிக்கிறது. வேதம் முழுவதையும் ஓத முடியாவிட்டாலும் வேதாரம்பம் மட்டுமாவது அன்று சொல்லப்படுகிறது.

நம்முடைய சமய ஞானத்தின் உட்பொருளான வேதங்களையும்,

சமயக் கொள்கையையும் பாது காத்து நமக்கு வழங்கிய முனிவர்களின் நினைவை வாடாது உள்ளத்தில் மலரச் செய்வதும் ஆவணி அவிட்டத்தின் உட்பொருள்.

இப்பூணூலை வருஷத்திற்கு ஒரு முறை மாற்றுவதற்காக ஏற்பட்ட பண்டிகையே ஆவணி அவிட்டம். இதற்கு மறுநாள் வரும் காயத்ரி ஜபம் மிகவும் சிரேஷ்டமானது. காயத்ரீ என்ற வார்த்தைக்கு தனலைக் கனம் (தியானம்) பண்ணுபவர்களை ரக்ஷிப்பது என்று அர்த்தம். வேத மந்திரங்களுக்குக்கெல்லாம் காயத்ரி அன்னைபோன்றது என்று வேதம் சொல்கிறது.

(வானதி பதிப்பகத்தார்-
தமிழா பண்டிகைகளும்
பண்பாடும்.)



# தீப ஆராதனம்

## சந்திரசேகர குருக்கள்—திருக்கழுக்குன்றம்

பூஜை முதலியவைகளில் நாயக மணியாய் விளங்குவது தீப உபசாரம். இந்த தீப ஆராதனம், இதர பூஜா காலங்களில், சாதாரணமாக இருந்தாலும், நைமித்திக பூஜையிலும் ஸாயங்கால பூஜையிலும் விசேஷமாகச் செய்யப்படுகிறது. அந்த காலம் வீணுக்காமல், ஆஸ்திகர்கள் அனைவரும் மனம், வாக்கு, காயம் லயித்து ஏகாக்ரதையாக இருந்து தரிசித்து வாழ் நாளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

இது தூப உபசாரம் தொடங்கி கற்பூர தீபம் முடியப் பூரணமடைகிறது. இவ்விதம், தரிசனத்தால் பிராரப்த கர்மானுஷ்டானமாய், அனேக கல்பகாலம், நாமடையக் கூடிய சுக துக்க பந்தங்கள், பாம்பின் முட்டைகள் போன்று நாளடைவில் கழிவை அடைகின்றன.

இதில் முதலில் தூப உபசாரம் மஹாப் பிரளயத்தைத் தெரிவிக்கிறது.

இது ராத்ரி, பகல் அடங்கி, ஸத்து அஸத்துக்கள் லயித்து, எல்லாம் தன்னிடத்தில் ஒன்றி, தமஸால் சூழப்பட்டு நீர் பூத்த நெருப்பாய்த்தானிருந்து, சிவம் தனித்திருக்கும் நிலையை நினைவு படுத்துவது.

இவ்விதம் தன்னுளடங்கிய எல்லாம் ஓய்வுடனிருக்குமளவில், சிவப்பரம்பொருள், தனக்குள் இச்சை என்னும் உணர்வு தோன்றிய வழி, இச்சா சக்தியின் காரியமாக குடிலையின் ஏவலால் பரநாத ரூபநாத சக்தி பிந்துவில் அடங்கி இருக்கும் தன்மை நீங்கி ஜகத்தின் உத்பத்திக்குக் காரணமாய் வெளி வர இருக்கும் தோற்றம் ஒரு களி என்னும் முகதீபத்தால் குறிப்பிடப்படுகிறது.

சக்தியின் பிரகாச ரூபவிளக்கம் இரண்டு தீபம். இதன் பின் உலக இயற்கை, அறிவு கலந்த வழி, ஞான சக்தியின் தொடர்பு ஏற்பட்டு மூன்று தீபம் ஆகிறது.

அதோடு செயலின் விளக்கம் சேரும் நிலை நான்கு தீபம். சிருஷ்டி முதலிய பஞ்ச கிருத்யங்களுக்கு அதிபர்களான பிரம்மா முதல் ஸதாசிவம் வரை காரணேசர்களின் தோற்றம் ஐந்து முகதீபம், பிறகு சப்த, அர்த்த, ரூப, ஸ்தாவர, ஜங்கமத்தன்மையுடன், நாநாரூப உலகத் தோற்றம் உண்

டாகிறது. அதைக் குறிக்கும் அனேக தீபங்களுடன், அனேக அடுக்குகளாய் விளங்கும் புஷ்ப ரததீபம் என்னும் மகத்தான தீபாராதனை காட்டப்படுகிறது.

பிறகு அடங்கு முறையில், ஸத்வ ஸம்பத்தி வாய்ந்த மகான்களுடைய ஆத்ம குணங்களைப் போன்று குறிப்பிட்ட தீபங்களை ஓர் அடுக்கில் விளங்கும் நக்ஷத்ர தீப உபசாரம்.

பிறகு உயிரினங்களில் திவ்யக் யோநிகளான மிருக பக்ஷி முதலியதுகளைக் குறிக்கும் தன்மையில் ஸர்ப்பம், விருஷபம், ஹம்ஸம், புருஷமிருகம், கூர்மம், மேரு முதலிய ஸ்தாவர ஜங்கமாந்தமானத் தோற்றங்களின் உபசாரங்களுக்கு அறிகுறியாக அதனதன் உருக் கொண்ட தீபங்களும் ஆராதிக்கப் படுகின்றன.

இவ்விதம் விரிவடைந்தபின் அடங்கு முறையில், பஞ்ச பிரம்ம தீபத்தில் அடங்கி, அதுவும் தீபத்தில் ஒன்றி உபசரிக்கும் நிலை ஏற்பட்டுப் பிறகு, கற்பூர தீபத்தால் பூரணமடைய விருக்கிறது.



# இந்து சமய மாணவர் மன்றம்

**15 வயது முதல் 30 வயதுவரை உள்ள மாணவர்களுக்கான அமைப்பு**

மன்றத்தின் மூலம்
செய்யவேண்டிய பணிகள்:

காலையில் எழுந்து பல் துலக்கி, நெற்றிக்கு அணிந்துகொண்டு, 'சிவாய நம' என்று 12 முறை சொல்லவேண்டும். அவ்வாறே இரவில் படுத்துத் தூங்குமுன் 12 முறை 'வேங்கடேசாய மங்களம்' என்று சொல்லவேண்டும்.

தாய், தந்தை, ஆசிரியர், பெரியோர் ஆகியோரிடம் மரியாதையுடனும், அவர்கள் வார்த்தைக்கு மதிப்பு தந்தும் நடந்துகொள்ள வேண்டும்.

வாரம் ஒரு முறை சமய சம்பந்தமான சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

மாதம் ஒரு முறை பட்டி மன்றம் போன்ற நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

அவரவர் தத்தமக்கு ஏற்ற வகையில் நான்காவது வகுப்பிலிருந்து மேலே படிக்கும் மாணவச் சிறுவர்களுக்கு நாளும் ஒரு மணி நேரமாவது இலவசமாக டியூஷன் என்ற வகையில் பள்ளிக்கூடப் பாடங்களைச் சொல்லித்தர வேண்டும்.

ஊர்க் கோவில்களில் திருவிழாக்கள், உற்சவங்கள் நடைபெறும் காலங்களில் தாமாகவே முன்வந்து மக்கட்கு உதவிகரமாக நடந்துகொண்டு சேவை செய்ய வேண்டும். (Voluntary Service) ஊர்க்காவல் படையினரின் சேவை மனப்பான்மையைப் போன்று (Home Guards) இது அமைய வேண்டும்.

பாமர மக்களிடம் நம்முடைய இந்து சமயத்தைப்பற்றியும், நல்லொழுக்கத்தைப்பற்றியும் அவர்களுக்குப் புரியும் வகையில் அவ்வப்போது எடுத்து விளக்கிச் சொல்ல வேண்டும்.

ஊரில் சமயத் தொண்டு செய்யும் சங்கங்கள் இருப்பின், அவர்களுடன் ஒன்று சேர்ந்து கூட்டாக ஒத்துழைத்து ஊர்க் காரியங்களைச் செய்யவேண்டும்.

மாணவர்களிடையே சமய சம்பந்தமான கவிதை, கட்டுரை, ஓவியப் போட்டிகளை நடத்திப் பரிசு வழங்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

இங்கிருந்து அனுப்பப்படும் இலவச சிறு சிறு வெளியீடுகளை மாண

வர்களிடையே விநியோகம் செய்து, அவர்கள் படித்துப் பயனடையுமாறு முயற்சி செய்தல் வேண்டும்.

பள்ளி மாணவர்களே கடவுள் நாமாவை ஆயிரக்கணக்கில் எழுதச் சொல்லி கடவுள் உருவம் பதித்த டாலர் வழங்க வேண்டும்.

சமீபத்தில் உள்ள பள்ளிக்கூடத்துக்குச் சென்று நீதிபோதனே, ஸ்தோத்திரப் புஸ்தகம் மாணவர்களுக்குக் கொடுத்து அதை மனப்பாடம் செய்து ஒப்புவிப்பவர்களுக்கு பரிசுகள் வழங்க வேண்டும்.

ஊரில் (அ) ஊருக்கு அருகில் உள்ள அரசாங்க மருத்துவமனே, நர்ஸிங் ஹோமில் உள்ள நோயாளிகளுக்கு வாரம் ஒரு முறையாவது கோயில்களிலிருந்து பகவத் பிரஸாதம் வழங்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

இந்து அனுதைப் பிணங்களே இந்து சம்பிரதாயப்படி அடக்கம் செய்ய தகனம் செய்ய உதவி செய்ய வேண்டும்.

ஊருக்கு அருகில் சென்ட்ரல் சப் ஜெயில் இருந்தால் அரசாங்க அனுமதி பெற்று வாரம் ஒரு முறை கைதிகளுக்கு பஜனே, மத சொற்பொழிவு நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஊரில் ஜனங்கள் கூடும்படியான சினிமா கொட்டகை முன்போ, கடைவீதியின் முகப்பிலோ, தெரு முகப்பிலோ ஒரு போர்டில் மேல்பாகம் முருகன், வேங்கடாஜலபதி போன்ற படங்களே எழுதி அதன் கீழ், "புனிதமான மனித ஜென்மம் எடுத்த அன்பர்களே, உலகம் தோன்றின நாள் முதல் இந்த பகவான் அனுக்ரஹம் செய்து வருகிறுர். எல்லா ஜனங்களும் இவரை வழிபட்டுப் பிரார்த்தனே செய்து ஆனந்தமாகவும் துன்பம் நீங்கியும் வாழ்கிறுர்கள், ஆகையால் புனிதமான மனிதப் பிறவி எடுத்த நீங்கள் எல்லோரும் இந்த பகவானிடம் நம்பிக்கையும் விசுவாசமும் வைத்து உங்கள் பிரார்த்தனேயைப் பகவானிடம் செலுத்திச் சந்தோஷமடைவீர்களாக" என்பது போன்ற வாக்கியங்களே எழுதி வைக்க வேண்டும்.

காலண்டர்களில் வருவனவற்றுள் நன்ருக உள்ள பல கடவுளர்களின் படங்களேச் சேகரித்து, கிராமத்தவர்களிடையே கண்காட்சி வைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

இம்மன்றத்தில் குறைந்தது 10 பேர்களாவது உறுப்பினர்களாகச் சேரவேண்டும். அதற்காகக் கட்டணம் எதுவும் வசூல் செய்யக் கூடாது. அதற்குப் பதிலாக அவ்வாறு சேரும் உறுப்பினர்கள் 1008 முறை கடவுள் நாமாவை எழுதித் தரவேண்டும் என்ற நியதியை வைத்துக்கொள்ள வேண்டும்.

இம் மன்றப் பணிகள் குறித்து விளக்கங்கள் தேவைப்படின் கீழ்க் காணும் முகவரிக்கு எழுதினுல், தேவையான விளக்கங்களும் உதவிகளும் இலவசமாக செய்து தரப்படும்.

முகவரி:
அமைப்பாளர்
இந்து சமய மன்றம்
12, சாலை வீதி, காஞ்சிபுரம்-2
(செங்கற்பட்டு மாவட்டம்)






திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S.சித்தனுதன்சன்ஸ் S.குருசாமி அவர்களுக்கு
சதானந்த விபூதி சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினுல் பொரித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# கடவுளை எப்படி வழிபட வேண்டும்?



ஸ்ரீ வி ஜி. பன்னீர்தாஸ்

உலகில் சிலபேர் புகழுக்காகப் பொருளைத் தியாகம் செய்கிறார்கள்.

மற்றும் சிலர் பொருளுக்காகப் புகழைத் தியாகம் செய்கின்றனர்.

பொருளையும் புகழையும் மட்டுமின்றி தமக்குரிய எல்லாவற்றையுமே இறைவனுக்காகத் தியாகம் செய்பவர்கள் அரிதினும் அரிது.

அவர்கள் தாம் உண்மையான பக்தர்கள்.

நாமெல்லாம் கடவுளை வழிபடும்போது, மனத்தில் ஏதேனும் ஒரு கோரிக்கையை வைத்துக் கொண்டே வழிபடுகிறோம்.

"எனக்குச் செல்வம் பெருக வேண்டும். என் செல்வாக்கு ஓங்க வேண்டும். நான் விரும்பிய பெண் எனக்கு மனைவியாக வரவேண்டும். எனக்கு நீண்ட ஆயுள் வேண்டும்..." இப்படி ஏதேனும் ஓர் ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்காகத்தான், நாம் ஆண்டவனை அணுகுகிறோம். இது உண்மையான பக்தியாக மாட்டாது.

பெருஞ் செல்வத்தை அடைவதற்காக ஆண்டவனை வேண்டுகிறவன், உண்மையில் செல்வத்தை வழிபடுகிறானே யன்றி ஆண்டவனை வழிபடவில்லை. செல்வம் அவனுடைய குறிக்கோள்; அதை அடைவதற்கு ஆண்டவன் அவனுக்கு ஒரு கருவி. அவ்வளவுதான்.

நாம் ஒரு பெரிய செல்வரிடம் வேலை தேடிச் செல்லுகிறோம். அவர், "உனக்கு என்ன சம்பளம் வேண்டும்?" என்று கேட்கிறார் உடனே நாம் என்ன பதில் சொல்லுகிறோம்.

"எனக்கு மாதம் ஒன்றுக்கு அரை மூட்டை அரிசி, நாலுபடி துவரம் பருப்பு, இரண்டு படி உளுந்தம் பருப்பு, நாலுகிலோ சர்க்கரை இவ்வளவும் சம்பளமாகத் தரவேண்டும்" என்று நாம் கேட்கிறோம்? இல்லை.

அதற்கு மாறாக, "மாதம் முந்நூறு ரூபாய் சம்பளம் வேண்

டும்!'' என்று கேட்கிறோம். ஏன் அப்படி?

நமக்கு உண்மையில் வேண்டியது அரிசி, உப்பு, புளி மிளகாய் இவைகள் தாம். இருந்தாலும் பணம் ஒன்று மட்டும் இருந்தால் மற்ற எல்லாவற்றையும் நம் விருப்பம்போல் விலைக்கு வாங்கிக் கொள்ளலாம் அல்லவா?

அதே போல, ஆரோக்கியம், புகழ், செல்வம், இவை எல்லாம் நமக்குத் தேவையானதுதான். ஆனால் இவற்றை எல்லாம் நாம் தனித்தனியாக இறைவனிடம் கேட்டுக் கொண்டிருக்க வேண்டியதில்லை. அவனுடைய திருவருள் ஒன்று மட்டும் இருந்தால் போதும். நமக்கு வேண்டிய மற்ற எல்லாப் பொருள்களும் நம்மைத் தேடித் தாமாகவே வந்து சேரும்.

ஆகையால், இறைவனை வழிபடும்போது, அவனுடைய திருவருள் ஒன்றைத்தான் யாசிக்க வேண்டுமே தவிர, வேறு எதையும் கேட்கக் கூடாது. இதுதான் உத்தமமான பக்தி.

ஆனால் ஒன்று! ''இறைவா! எனக்கு உன்னுடைய திருவருள் ஒன்றுதான் வேண்டும்!'' என்று வாய் சொல்லிக் கொண்டிருக்கும் போதே தம் மனமானது பொன்னையும் புகழையும்பற்றி எண்ணிக் கொண்டிருக்குமானால், அது போலி பக்தி ஆகிவிடும். அத்தகைய பக்தி பயன் அளிக்காது.

ஆகவே, இறைவனுடைய திருவருளை நாம் மனப் பூர்வமாக நாடி வழிபட வேண்டும். அப்படி வழிபட்டால் அது நமக்குக் கட்டாயம் கிட்டும். ●

# பூஜையின் புஷ்பங்கள்

பகவானுக்கோ, தேவிக்கோ செய்யப்படும் பூஜைகளில் புஷ் பங்கள் முக்கிய இடம் பெறுகின் றன.

அர்ச்சனைக்கு புஷ்பங்கள் இன்றி யமையாதவை. ஆனால் எல்லா வித புஷ்பங்களினாலும் அர்ச்சனை செய்யக்கூடாது. அர்ச்சனைக்குரிய புஷ்பங்கள் இன்னின்னவை, இன் னின்ன புஷ்பங்களினால் அர்ச்சனை செய்தால் இன்னின்ன பலன் கிடைக்கும் என்று ஆகமங்கள் வரையறுத்துக் கூறுகின்றன.

புண்ணியத்தை வளர்ப்பதினா லும், பாபக் கூட்டங்களை அழிப் பதனாலும், நிறைவானபொருளைக் கொடுப்பதினாலும் புஷ்பம் எனப் பெயர் பெற்றது என்பது புஷ்ப சப்தத்தின் பொருள்.

புஷ்பங்களில், சாத்விகம், ராஜஸம், தாமஸம், மிச்ரம் என்று நான்கு வகை யுண்டு.

வெண்மையான புஷ்பங்கள் ஸாத்விக புஷ்பங்கள்; சிவப்பு நிற முள்ள புஷ்பங்கள் ராஜஸ புஷ் பங்கள்; கரு நிறமான புஷ்பங்கள் தாமஸ புஷ்பங்கள்; மஞ்சள் நிற முடைய புஷ்பங்கள் மிச்ர புஷ்பங் கள்.

சாத்விக புஷ்பங்களில் முக்கிய மானவை: — வெண் தாமரை, சுர புன்னை, சங்க புஷ்பம், மல்லிகை, நந்தியாவட்டை, வில்வப் பூ, ஜாதி, வெள்ளெருக்கு, மகிழம்பூ, முல்லை, தும்பை, பத்ராட்சி, கண் டங்கத்திரி, செண்பகம், வெள்ளை அரளி, வெள்ளை ஊமத்தம்பூ, நாணற்பூ.

இப்படிப்பட்ட புஷ்பங்களினால் சிவபெருமானுக்கு அர்ச்சனை செய் தால் முக்தி கிடைக்குமென்பர்.

ராஜஸ புஷ்பங்களில் முக்கிய மானவை:—

செங்கழுநீர், செந்தாமரை, செவ்வலரி, சிவந்த பாதிரி, சிவந்த பலாசம் முதலிய சிவந்த புஷ்பங் கள்; இவற்றால் பகவானை அர்ச்சித் தால் போகமுண்டாகுமென்பர்.

நீலோத் பலம் தவிர, மற்ற எல்லாக் கருநிற புஷ்பங்களும், தாமஸ புஷ்பங்களாகும். இவற் றால் சிவபிரானை அர்ச்சிக்கக் கூடாது.

வில்வபத்திரம், பச்சை, துளசி, வெட்டிவேர், மருக்கொழுந்து, அருகு, கதிர்பச்சை முதலிய பத் திரங்கள் யாவும் தாமஸ ராஜஸ பத்திரங்களாகும். இவற்றால் சிவ

பெருமானுக்கு அர்ச்சனை செய்தால் போகம், மோட்சம் இரண்டும் உண்டாகும்.

அழிஞ்சில் பத்திரமும், புஷ்பமும், அரச மரத்தின் இலையும் விலக்கத்தக்கவை. அதுபோலவே, வாசனை இல்லாததும் அதிக வாசனையுள்ளதுமான புஷ்பங்களை நீக்கவேண்டும். வாசனையில்லாத புஷ்பங்களாயிருந்தாலும் பரிசுத்தமானவையாயிருந்தால் ஏற்றுக் கொள்ளலாம். அங்ஙனமே அதிக வாசனையுடையதாயிருந்தாலும் அசுத்தமானதாயிருந்தால் அவற்றை நீக்கவேண்டும்.

வாடிப்போனதும், தானே பூமியில் விழுந்ததும், தலை மயிரினாலும் புழு முதலியவைகளாலும் அசுத்தமாகி விட்டதும், சரீரத்தில் சம்பந்தப்பட்டதும், முகரப்பட்டதும், மொககாக இருப்பதும் பழையதுமான புஷ்பங்களும், ஸ்நானம் செய்துவிட்டு அப்படியே எடுத்து வந்த புஷ்பங்களும், வஸ்திரததில் கொண்டு வரப்பட்ட புஷ்பங்களும, கையில் கொண்டு வந்த புஷ்பங்களும், கொட்டை இலையில் கொண்டு வந்த புஷ்பங்களும் பூஜா பலனை அளிக்காது.

மற்றும், கோயில் நந்தவனத்தில் எடுத்த புஷ்பங்களைக் கொண்டு வீட்டிலுள்ள தேவதைகளை பூஜிக்கக்கூடாது. மற்றும், கடைகளில் வாங்கிய புஷ்பங்களைக் கொண்டு பூஜிக்கக்கூடாது. தன் தோட்டத்திலோ வனத்திலோ உண்டான புஷ்பங்களைக் கொண்டே பூஜிக்கவேண்டும்.

புஷ்பங்களை கிள்ளி பூஜிக்கக் கூடாது. அப்படி பூஜித்தால் துர்ப்பாக்கியம் ஏற்படும். ஆனால் பத்திரங்களைக் கிள்ளி அர்ச்சிக்கலாம். வில்வம், துளசி இவைகளை தளமாக பூஜிக்கலாம்.

மூன்று தளங்களுடையதும் சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்கள் பொருந்தியதும், ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்தி ஸ்வரூபமாயிருப்பதுமான வில்வத்தை சிவபிரானுக்கு அர்ப்பணம் செய்பவன் மூன்று ஜன்மாவின் குலோத்தாரணம் செய்து சிவலோகத்தில் கொண்டாடப்படுவான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பததிரம், புஷ்பம், பழம் முதலியவைகளை தலை கீழாக சாத்தக் கூடாது. எப்படி உண்டாயிற்றோ அப்படியே சாத்த வேண்டும. இது பொதுவானவிதி. ஆனல் வில்வத்தை மட்டும் கவிழ்த்துச் சாத்தலா மென்பது சிலருடைய கருத்து.

அக்ஷதையால் விஷ்ணுவையும், துளசியால் விநாயகரையும், அருகினல் தேவியையும், வில்வத்தினல் சூரியனையும், ஊமத்தம் பூவினலும் எருக்கம் பூவினலும் விஷ்ணுவையும் முறையே பூஜிக்கக்கூடாது.

பொன்மயமான கடம்ப புஷ்பங்கள் இரவில் சமர்ப்பிக்கத் தக்கவை. மேலே சொன்ன விலக்

கப்பட்ட சமஸ்தமான புஷ்பங் களையும் பகலில் சமர்ப்பிக்கலாம். மல்லிகையையும் அரளியையும் பகலிலும் இரவிலும் பூஜிக்கலாம்.

பலவித, அதாவது பூஜிக்கத் தக்க பலவித புஷ்பங்களைக் கோத்து மாலையாகக் கட்டி பக வானுக்கு சமர்ப்பித்தால் இரு மடங்கு பலன் கிட்டும்.

புஷ்பங்கள் கிடைக்காவிட் டால் பத்திரங்களால் பூஜிக்க லாம். பத்திரங்களும் கிடைக்கா விட்டால் பழங்களால் சிறப்பாக கொய்யாப்பழம், எலுமிச்சம் பழம், வாழைப்பழம், மாதுளம் பழம் இப்படிப்பட்ட பழங்களால் பூஜிக்கலாம். பழங்களும் கிடைக் காவிட்டால், புல், புதர் முதலிய மூலிகையையாவது சமர்ப்பித்தல் வேண்டும். அவையும் கிடைக்கா விட்டால் மனத்தினுல் பூஜை, அதாவது மானஸ பூஜை செய்ய வேண்டும்.

தொகுப்பு : எட்டாவது ஆகம சில்ப சதஸ் மலரிலிருந்து.



## உங்கள் மனக்குறை தீர வேண்டுமா?

உங்களுக்கு ஏற்பட்ட மனக்குறைகள் நீங்கி நீங்கள் மகிழ்ச்சியுடன் இருப்பதற்கு தினசரி காலையிலும், மாலை யிலும் ஸ்ரீ அபிராமிபட்டர் அருளிச்செய்த அபிராமி அந்தாதியில் 71-வது பாசுரம் பாராயணம் செய்யுங்கள். அந்தப் பாசுரம்.

அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவல்லி அருமறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத்தாள்பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமளயாமளைக் கொம்பிருக்க
இழவுற்று நின்றநெஞ்சேயிரங் கேலுனக்(கு)
என்குறையே

# காவேரி

முன்னொரு காலத்தில் கவேரர் என்ற ஓர் அரசர் இருந்தார். அவர் அற நூல்களில் கூறிய ஒழுக்கப்படி ஒழுகிவந்தார். பயனைக் கருதாது கடமைகளைச் செய்துவந்ததனால் அவர் மனம் தெளிவை அடைந்தது.மோட்சத்தையடைய விருப்பங்கொண்டார். இமயமலையை அடைந்து தவம் செய்யத் தொடங்கினார்.

அநேக ஆண்டுகள் கழிந்தன. இவரது கடும் தவத்தைக் கண்ட பிரமன அரசரின் எதிரில் தோன்றினார். "யாது பயனைக் கருதிக் கடுந்தவம் புரிகிறாய்?" என அரசரைக் கேட்டார்.

அரசர் பிரமனை வணங்கி, "தேவா, நீங்கள் எனது தவத்தில் சந்தோஷமுள்ளவர்களாக இருந்தால் எனக்கு அழிவற்ற மோட்சத்தை அளியுங்கள்" என்றார். பிரமன், "பிரம்மவித்யையைப் பெற்றாலன்றி மோக்ஷத்தை அடைய முடியாது. நானோ மற்றத் தேவர்களோ அதைக் கொடுக்கக்கூடிய சக்தியுள்ளவர்கள் அல்ல. இருந்தாலும் என் மகளும் உலக அன்னையுமான விஷ்ணுமாயையை உனக்கு மகளாக இருக்கும்படி வரமளிக்கிறேன். அவளது அநுக்கிரகத்தினால் நீ விரும்பிய மோட்சத்தை அடைவாய்" என்று அநுக்கிரகித்தார்.

பிறகு விஷ்ணு மாயையான தேவியை எண்ணினார். தேவியும் உடனே பிரமனது எதிரில் தோன்றினாள். பிரமன் அவளை நோக்கி, "தேவி இந்தக் கவேரன் என்ற அரசன் மோட்சத்தை விரும்பிக் கடும்தவம் செய்தான். பிரம்ம வித்யையான உனது அநுக்கிரகம் இல்லாமல் அதை அடைய முடியாதல்லவா? நீ இவனுக்குப் புத்திரியாக இருந்து இவனது விருப்பத்தைப் பூர்த்திசெய்ய வேண்டும்.

மேலும் காவேரி என்ற பெயருடன் நதியாக ஆகி எல்லா ஜீவர்களையும் காப்பாற்றக் கடவாய். பின்னும் உனது மற்றோர் அம்சம் லோபாமுத்ரை என்ற பெயருடன் அகத்தியருக்கு மனைவியாக இருந்துகொண்டு உலகில் பிரம்ம வித்யையைப் பரப்பவேண்டும்" எனச் சொல்லிப் பிரமன் மறைந்தார்.

உடனே தேவி குழந்தை வடிவாக அரசர் கவேரரின் முன் பாகத் தோன்றினாள். அரசர் குழந்தையை அன்புடன் எடுத்து வளர்த்துவந்தார். கவேரரின் மகளானதால் அவளுக்குக் காவேரி என்று பெயர். அவள் சற்றுப் பெரியவளானவுடன் கவேரர் தவம் செய்யக் காட்டுக்குச் சென்றார்; சந்நியாசம் ஏற்றார்; புண்யஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு வந்தார். கர்மவினை முடிந்தவுடன் பிரம்மத்தில் ஐக்கியமானார்.

காவேரியும் நதீரூபமாக இருந்துகொண்டு உலகிற்கு நன்மை செய்வதில் நாட்டம் கொண்டவளாய் நாராயணனைக் குறித்துத் தவம்

செய்யத் தொடங்கினாள். தவத்திற்கு மெச்சிய நாராயணனும் காவேரியின் முன் தோன்றினார். காவேரி அவரை வணங்கித் தனது விருப்பத்தைத் தெரிவித்தாள்.

நாராயணன், "நான் ஸஹ்ய மலையில் நெல்லிமரமாக விளங்கிக் கொண்டிருக்கிறேன். பிரம்மன் என் பாதங்களைத் தனது சங்கிலுள்ள விரஜை என்ற ஆற்று நீரால் அலம்பிப் பூஜிக்கப்போகிறான். அப்பொழுது அந்த நீரோடு நீயும் கலந்துகொண்டு தென் தேசத்தை பரிசுத்தப்படுத்து. உனக்கு ஸஹ்ய ஆமலக தீர்த்தமென்றும், சங்க தீர்த்தமென்றும், தக்ஷிணகங்கை என்றும் பெயர் ஏற்படும்" என அநுக்ரஹம் செய்து மறைந்தார்.

இந்தச் சமயத்தில் அகத்திய முனிவர் மோட்சத்தை விரும்பிக் கடுந்தவம் செய்துவந்தார். பிரமன் அவர்முன் தோன்றி இல்லற தர்மத்தின் மேன்மையை விளக்கினார். முதலில் அகத்தியர் இல்லற தர்மத்தில் பிரவேசிக்கச் சம்மதப்படவில்லை. அதில் உள்ள தீமைகளை விளக்கிக் கூறினார்.

பிரமன், "ஒருவன் செய்த நல்வினை தீவினைக்கு ஏற்ப மனைவி அமைகிறாள். மனைவி நல்லொழுக்கம் உள்ளவளாக இருந்தால் இல்லற தர்மமே உத்தம தர்மமாக அமைகிறது. நீரோ கடுந்தவம் செய்து, பலவிதச் சித்திகளை அடைந்திருக்கிறீர். உலகிற்கு நன்மை செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் தவம் செய்துகொண்டிருக்கும் என் மகளான காவேரியை நீர் மணம் செய்துகொள்ளும். அதனால் உமக்கும் உலகிற்கும் நன்மை ஏற்படும்" என்று கூறி மறைந்தார்.

அகத்தியரும் பிரம்மதேவனின் சொற்படி இமயமலையை அடைந்தார். அங்கே தவம் செய்துகொண்டிருந்த காவேரியைக் கண்ணுற்றார். பிரம்மதேவனின் கட்டளையைக் கூறினார்.

காவேரியும் அதற்குச் சம்மதித்தாள். தனது மேனியை இரண்டு மூர்த்தியாகப் பிரித்துக்கொண்டாள். 'காவேரி' என்ற பெயருடன் அகத்தியருடைய கமண்டலுவில் வந்து அடங்கினாள். லோபமுத்ரை என்ற மற்றோர் உருவத்துடன் அகத்தியர் கால்களில் வணங்கி நின்றாள்.

பிரம்மா முதலிய தேவர்கள் வந்து கூடினார்கள். பிரமன் வேத விதிப்படி லோபமுத்ரையை அகத்தியருக்குப் பாணிக்ரஹணம் செய்து கொடுத்தார். அகத்தியர் தம் மனைவியுடன் பிரம்மா விஷ்ணு ருத்திரர்களை வணங்கினார்.

லோபமுத்திரை தன் அன்னையான ஸரஸ்வதியிடம் விடைபெற்றுக்கொள்ளச் சென்றாள். அப்பொழுது ஸரஸ்வதி, குடும்ப ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய தர்மங்களை உபதேசித்து ஆசீர்வதித்து அனுப்பினாள்.

பிறகு அகத்தியர் இமயமலையிலிருந்து கிளம்பித் தம் மனைவியுடன் தென் தேசத்தை நோக்கி வந்தார். வழியில் விந்தியமலை ஆகாயமளாவி வளர்ந்துகொண்டு சூரியனுடைய போக்கைத் தடுத்துக்கொண்டிருந்தது. அகத்தியர் அதை அன்புடன் தாழ்த்தி, "நான் திரும்பிவரும்வரை இவ்விதமே இரு" என அநுக்கிரகித்து, ஸஹ்ய பர்வதத்தை அடைந்தார்.

அங்கே ஓர் இடத்தில் தமது கமண்டுலுவை வைத்தார். பிறகு தம் சிடர்களை அழைத்து, "நான் சுவர்ணமுகி நதியில் மூழ்கி நித்ய கர்மாக்களைச் செய்து வருகிறேன். அதுவரை இந்தக் கமண்டுலுவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கட்டளையிட்டு, ஸ்நானத்திற்குச் சென்றுவிட்டார்.

இந்தச் சமயத்தில் பிரம்மதேவர் அந்த மலையில் ஓங்கி வளர்ந்திருக்கும் நெல்லிமரத்தைக் கண்ணுற்றார். அதன் அருகில் சென்று அம்மரத்தை வலம்வந்தார். அம்மரத்தில் சங்கு, சக்கரம், கதை, பத்மம் முதலியவைகளுடன் மஹாவிஷ்ணு பிரகாசித்தார்.

பிரம்மதேவர் தமது சங்கதீர்த்தத்தால் மஹாவிஷ்ணுவின் பாத கமலங்களை அபிஷேகம் செய்து பூஜித்தார். அபிஷேகம் செய்தநீர் ஆறாக ஓடிற்று. இதைக் கண்ட கமண்டுலுவிலுள்ள காவேரி மிகச் சந்தோஷங் கொண்டாள். குளிர்ந்த பெருங்காற்று உண்டாயிற்று. இந்திரனது ஏவலினால் பெருமழை பெய்யத் தொடங்கியது.

அகத்தியரின் சிடர்கள் காற்று மழைக்குப் பயந்து, ஒரு மரத்தடியை அடைந்தார்கள். அப்பொழுது வீசின பெருங்காற்றினால் அகத்தியரின் கமண்டலு சாய்ந்துவிட்டது. அதிலிருந்து காவேரியும் மற்றத் தீர்த்தங்களும் மிகுந்த உத்ஸாஹத்துடன் அபிஷேகதீர்த்தமான விரஜாநதியுடன் கலந்து, தென்திசை நோக்கிப் பெருகின. அகத்தியர் தம் கடமைகளை முடித்துக்கொண்டு திரும்பி வந்தார்.

காவேரி நதியாகப் பெருக்கெடுத்துப் போவதைக் கண்ணுற்றார். ஆனந்தம் கொண்டார். "ஹே காவேரி, உனது பாக்கியமே பாக்கியம். உன்னால் தென்தேசம் புனிதமாகிறது. உன்னில் எப்பொழுதும் ஸ்நானம் செய்பவர்கள் அறிவாளிகளாகவும் பரிசுத்த மனமுள்ளவர்களாகவும் ஆவார்கள். எவ்விதப் பாவிகளாயினும் துலா மாதத்தில் ஸ்நானம் செய்வார்களானால் அவர்கள் சுத்தர்களாகி ஈசனது சரணங்களை அடைவார்கள்'' என்று அநுக்கிரகம் செய்தார். பிறகு தேவி லோபாமுத்திரையுடன் அந்த மலையிலேயே தங்கியிருந்தார்.

நன்றி: ஸ்ரீ காமகோடி.



ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17